# ஸ்ரீ பகவத்கீதை

வசனம்.

டி. வி. கிருஷ்ணசாமி, பி. ஏ., பி. எல்.
இயற்றியது.

ரிடையர்ட் ஜில்லா ஜட்ஜு
ஸ்ரீமான் கெ. எஸ். ராமசுவாமி சாஸ்திரிகள் பி. ஏ., பி. எல்.
எழுதின முன்னுரையுடன்.

முதற் பதிப்பு.



ஆரணி:
அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.



விலை அணு 8. 1933 தபால்கூலி வேறு.

மூக்தாலயம்
ஆரணி, வட ஆற்காடு.




பார்த்தன் றேரினல், வார்த்தை யாலவ,
ஞர்த்தி போக்கிய; மூர்த்தி காக்கவே.



பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகள்.

# உரிமையுரை

ஓதநீ ருலகம் வாழ்வை யுறவரு ளுருவ மாகிக்
கீதையும் கீதை சொல்லும் கிளர்பொரு ளதுவு மாகி
ஏதநீத் தருள்வா ளுகி எழில்திகழ் ரமண தேவன்
பாதபங் கயத்திற் கிந்நூல் பரிவுட னுரிமை செய்வாம்

உ

வெற்றிவேலுற்ற துணை.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.

# சிறப்புப்பாயிரம்



ஆரணி போர்டு ஹைஸ்கூல் மாஜி தமிழ்ப் பண்டிதர்
ஆ. மாசிலாமணி முதலியார் அவர்களின் புதல்வரும்
வந்தவாசி போர்டு ஹைஸ்கூல் முதலுதவிப் போதகாசிரியர்
கவிராஜமாகேசரி
பிரம்மஸ்ரீ M. S. மீனாட்சி சுந்தரம் அய்யர், B. A., L. T.,
அவர்களின் மாணவருமாகிய

ஆம்பூர் M. E. L. M. ஹைஸ்கூல் & செகண்டரி டீச்சர்ஸ்
டிரைனிங் ஸ்கூல் தமிழ்த் தலைமையாசிரியர்

**பாலகவி ஆ. மா. சிவஞானம் அவர்கள்**

இயற்றியது.

1. நித்திலத் தரங்க மார்த்த நெடுங்கலைப் புடவி மைந்தர்
சித்தமொத் துரிமை மேவிச் செறியிரு ளகந்தை சீத்து
நித்தநின் மலத்தி னீர்மை நிறைந்தறி வுருவி ஞானு
நத்துநல் லியல்பின் வைகும் நவையறு நெறியைத் தேர்ந்தே ;

2. தன்னலங் கருது மாக்கள் தந்தலை தாழ்க்க வேறோ
ரின்னலத் துவகை யெய்தா ரிரிந்திட விரிந்த நோக்கிற்
பன்னலங் கிளரு நல்லோர் பரிந்தக மகிழ வாய்மைத்
தொன்னல மனைத்துஞ் சூழ்ந்து துகளறத் தெரிக்கு மாற்றால்;

3. தாழுவப் புறுதல் துய்த்துத் தாரணி மகிழக் கண்டு
காமுறு மறிஞ ரேமுய்க் கவினியல் விளங்க விந்நாள்
தாமரைத் திருவின் கேள்வன் தனஞ்சயற் குரைத்த கீதை
யாமதை யெவருந் தேற வருந்தமி ழுரையி னல்கி ;

4. அகிலமா யடிகளாயிங் காருயிர்க் கிடுக்க ணீக்கத்
தகுதியி னருட்க ணோக்குந் தண்ணருள் ரமண ஞான
பகவனு ரரிய தாட்குப் பரிவுட னுரிமை யாக்கி
யகனிலத் தொளியை நாட்டு மவ்வெனவ னறையக் கேண்மின் ;

5. அறிவுகண் ணிகந்து ஞாலத் தடரிரு ளடர்க்க வுள்ளத்
துறுகணுற் றுளெந்தெஞ் ஞான்று முயர்மறை முறையி னோது
நெறியிழந் தொழுகு மாக்கள் நீர்மைநேர் தரவெம் மாயை
தெறுமிய லெளிதி னோர்ந்து தெளிவுறத் தெரிக்கு நல்லோன்;

6. மயனில விடர்கொள் பேதி வழுவறும் விழிப்பின் மன்னி
அயனிலத் தவரை யெள்ளு மந்நிலை நமரெந் நாளும்
பயனனி முயல மல்கும் பலதுறை நெறியி னுக்கச்
செயனிறை யரிய வாழ்விற் றிகழ்தர வூக்குஞ் செம்மல்;

7. அருந்தமி ழாங்கிலத்தோ டாரிய முதலவாகப்
பொருந்தியமொழிகள்சொல்லும்பொருணலமனைத்துமுள்ளந்
திருந்துற வறிந்து நந்தந் தேத்தியல் சிறக்க நன்மை
தருந்திறத் துழைக்கு மேன்மைச் சமரசச் செல்வ னுமால்;

8. தென்றமி ழறிவிற் றூய்மைத் திருமறை யவர்கள் வாழ்க்கை
துன்றுறு முறையு ளாகித் துலங்குதெள் ளூரில் வாச
மின்றிகழ் கமலத் தண்டார் வேங்கடசுப்பன் மேனுள்
நன்றியல் தவத்தின் வந்து நான்மறைக் கிறைமை பூண்டோன்;

9. நவில் பொறை யடக்கம் வாய்மை நல்லருள் வண்மை யேனைச்
சிவமுறு மியல்க ளொன்றுய்த் திருவுருக் கொண்ட தீரான்
பவமறு நெறியில் யாரும் பழகுறப் புரியு மாற்றல்
தவமிகு புகழோன் கிருஷ்ணசாமி மாதவனுமன்றே.

---

# FOREWORD

The aim of this work is to broadcast the world-saving ideas of the Gita in simple and homely Tamil. A democratic age needs democratic methods of cultural propaganda. Further. in an age of increasing materialism and pre-occupation with worldly tasks and dreams, an age wherein political and economic complications make human life — vext and unhappy at its best - a mere tale of sound and fury signifying nothing - it is no use to talk about hermitages and sylvan surroundings and pure disciples seeking pure teachers and carrying dry wood on their shoulders and praying for the gift of spiritual illumination. The light of the Gita must be taken into every home. nay into every heart, in India. The imparting of the knowledge of the Gita and its ideals underneath a silk covering by Guru to Sishya is not the only *Jnana yagna* referred to at the end of the Gita. The words *Bodhayantah parasparam* and *Kathayanthah* stated in Chapter X of the Gita show that the Lord expects us, at least in this age which has succeeded His ascent to the blessed region of supernal glory, to communicate to one another our happy realisations of His love and mercy and even carry the message of His redemptive love and grace to those who have never heard about Him and preach Him to the nations.

A recent writer says well. " Religion is man's expression of the discovery of a cleavage between that which is ordinary and common, and that which is charged with mystery and sacredness." In the West, Religion is often equated to philanthropy

and social service. India has, however, shown that *Loka sangraha* is a middle term in the series and that love of man and love of Nature should eventually find flowering and fruitage in the love of God who is the Maker of all and who is the immanent and transcendent Sat-Chid-Ananda.

What is the real hindrance to such a lofty realisation? It is our egoism and our love of petty pleasure which is imagined to reside in external objects. These are compendiously called *Ahankara* and *Mamakara*. Caird has called it in modern language, "The disease of subjectivity which has infected the modern world." Spiritual joy is unpleasant like poison at the beginning, but is sweet like nectar at the end. It is experienced by the soul in crescent realisation as it ascends up the golden stairway (So'pa'na) of *Karma marga* and *Yoga marga* and *Bhakti marga* and *Jnana marga*. The first step is *Nishkama karma* (the doing of duty for its own sake as a love-offering to God) and the last step is the bliss of God-love and God-realisation.

It is this sublime doctrine that Mr. Krishnaswami Iyer brings home to us in easy and charming Tamil. His work will be of special utility to students. The young men and women of India who are going to enjoy the privilege and discharge the obligation of serving our motherland and glorifying God, need such help and guidance amidst the many and soulless distractions of to-day. Mr. Krishnaswami Iyer has laboured in a field where the labourers are few though the harvest is rich. I wish him every success.

MADRAS, 6th Sep. 1933.

K. S. RAMASWAMI SASTRI, B. A., B. L.
*Retired District Judge.*

ரிடையர்டு ஜில்லா ஜட்ஜு

## ஸ்ரீமான் K. S. ராமசுவாமி சாஸ்திரி அவர்கள் B. A. B. L.

எ ழு தி ன

## ஆங்கில முன்னுரையின் தமிழ்மொழி பெயர்ப்பு.

ஸ்ரீமத் பகவத் கீதையின் லோகோத்தாரக பாவங்களை (கருத்துக்களை)த் தெள்ளிய எளிய தமிழிற் பரவச் செய்வதே இந்நூலின் உத்தேசம். சமத்வ உணர்ச்சியுற்ற இக்காலத்தின் தேவைக்கேற்ற முறைகளில் நன்னெறிகளைப் பரவச் செய்யவேண்டியது அவசியம். மேலும், லோகாயதமும், லௌகிக காரியங்களும் கனவுகளும் பெருகி, ராஜீயச் சிக்கல்களும் பொருளாதார நெருக்கடியும், மனித வாழ்க்கையை அர்த்தமில்லாத வெறும் குழப்பமாகவும் சந்தடியாகவும் செய்து வெறுப்பையும் துக்கத்தையுமே யளிக்கும் இந்நாளில், அரண்யங்கள் சூழ்ந்த ஆச்ரமங்களிலுள்ள தூய குருமார்களை நாடி ஞான வொளியைவேண்டிப் பெறுவதற்குச் சற்சீடர்கள் சமித்துக்களைச் சுமந்து செல்வதென்பது வீண்வார்த்தையாகும். கீதையின் ஒளி வீடுதோறும், இந்தியாவிலுள்ள உள்ளந்தோறும், பரவச் செய்ய வேண்டும். பட்டுப்படுதாவிற்குள் குரு சிஷ்யனுக்குக் கீதையின் ரஹஸ்யத்தையும் லக்ஷ்யத்தையும் போதிப்பதுதான் கீதையின் முடிவிற் கூறிய ஞானயஞ்ஞம் என்று சொல்லொணாது. கீதையின் பத்தாவது அத்தியாயத்திற் கூறப்பட்ட " போதயந்த : பரஸ்பரம், " " கதயந்த : " என்னும் பதங்கள், பகவான் தனது அமானுஷ திவ்ய மங்கள பதத்திற்குத் திரும்பிய யுகத்திற்குப் பிந்தியதாம் நமது யுகத்தில், அவனது அன்பையும் அருளையும் பற்றிய நமது ஆநந்தானுபவங்களை ஒருவர்க் கொருவர் தெரிவித்துக் கொள்வதுடன், பதிதபாவனமாம் அவ்வனுக்ரகப்ரேம சமாசாரத்தை, அவனைப்பற்றி ஒருபோதும் கேட்டிராதவர்க்கும் கூறவேண்டும். தேசாந்தரங்களிலெல்லாம் அவனைப்பற்றிப் பிரசாரம் செய்யவேண்டுமென்று பகவான் எதிர்பார்க்கிறார் என்பதை விளக்கும். " சாதாரணமாகவும் சகஜமாகவுமிருப்பதற்கும், அசிந்த்யமாகவும் அற்புதமாகவும், பவித்திரமுமாயிருப்பதற்கும், இடையேயுள்ள பேதத்தை யுணர்ந்து விளக்குவதே மதம், " என்று தற்கால ஆசிரியர் ஒருவர் நன்கு கூறியுள்ளார். பரோபகாரமும் சமூகசேவையுமே மதமென்று மேனாட்டார்

பெரும்பாலும் கருதுகின்றனர். இந்தியாவோ, உலக உபகாரமென்பது வரிசைக்கிரமத்திலுள்ள ஓர்படியே என்றும், மனிதனை நேசித்தலும், இயற்கையை நேசித்தலும், முடிவில், அனைத்தையும் படைப்பவனும், அனைத்தினுள்ளும் இருப்பவனும், அனைத்தையும் தாண்டிய சச்சிதானந்தனுமாகிய ஈசனை நேசித்தலாக மலர்ச்சியுறவேண்டுமென்றும் காண்பித்திருக்கிறது.

அத்தகைய உன்னத அநுபவத்திற்கு நேரே தடையாய் நிற்பவை நமது அகங்காரமும், வெளிவிஷயங்களில் இருப்பதாக நாம் பிரமிக்கும் அற்பசுகத்தில் நமக்குள்ள ஆர்வமுந்தான். இவைகளே அகங்கார மமகாரங்கள் என்று சொல்லப்படுபவை. இதையே தற்கால பாஷையில் 'கோர்ட்' என்பவர், " இக்கால உலகத்தைப் பிடித்துப் பிடிக்கும் அகந்தை வியாதி " என்று கூறியுள்ளார். சின்மயானந்தம் ஆரம்பத்தில் விஷம்போல் வெறுப்பாகவும் முடிவில் அமிர்தம்போல் இனிப்பாகவும் இருக்கும். கர்ம, யோக, பக்தி, ஞான மார்க்கங்களாம் தங்கப்படிகள் வழியே உயர ஏறிப்போகும் ஜீவன் அனுபவிக்கும் சைதன்ய சந்திரோதயம் அதுவே. கடமைக்காகவே அதைச்செய்து கடவுளுக்கு ஆர்ப்பிக்கும் நிஷ்காம்ய கர்மமே முதற்படி. ஈச்வரப்ரேமானந்தமும் ஞானமுமே முடிவாம்படி.

இவ்வுன்னதக் கோட்பாட்டையே ஸ்ரீமான் கிருஷ்ணசாமி அய்யர் சுலபமான அழகிய தமிழில் நமக்காகக் கொணர்ந்துள்ளார். இந்நூல் மாணவர்க்குப் பெரிதும் உதவுவதாகும். தாய் நாட்டுத் தொண்டும் பகவானைப் போற்றுதலுமாம் பாக்யத்தையும் கடமையையும் ஏற்கவேண்டியவர்களாகிய நம் தேசத்து வாலிடர்களுக்கும், பெண்மணிகளுக்கும், தற்காலத்தின் பற்பல அனுத்மக்கவர்ச்சிகளினிடையே, இத்தகைய வழிகாட்டியும் உதவியும் அத்தியாவசியமாகும். அறவடை சிறந்திலங்கினும் உழைப்பாளிகள் சிலராகவே இருக்கும் ஓர் துறையில் ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி அய்யர் பாடுபட்டிருக்கிறார். அவர் முற்றிலும் வெற்றியுற வேண்டுமென்று நான் கோருகிறேன்.

சென்னை }
6—9—1933, }

# முகவுரை.

ஸ்ரீ பகவத்கீதையின் இத்தமிழ் மொழிபெயர்ப்பு உலக வழக்கான வசன நடையில் இயற்றப்பட்டிருக்கிறது. இது தனித்தனி ச்லோகங்களின் பொருளாக வல்லாமல், சேர்ந்தாற்போல் தொடர்ச்சியாய் இருப்பதால், இதன் வாயிலாய் கிரந்தத்தின் தாத்பர்யத்தை ஒருங்கே கிரகித்துணர்தல் எளிதாம். மூல கிரந்த பதங்களின் அழகையும் அமைப்பையும் சக்தியையும் குறைக்காமல் அப்படியே காட்டுவதற்காக, அவைகளே ஆங்காங்கு கையாளப்பட்டு, பக்கத்தில் வளைவுக் குறியிட்டு (within brackets) தமிழ் அர்த்தமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனுல் மூலத்தைப் படிக்க இது ஒரு படியாகவும் உதவுமென்று கருதப்படுகிறது. மேற்கோள் குறியிடை (within inverted comas) யுள்ள பதங்கள் இதரார்களுடைய உரையைக் குறிக்கும்.

இந்துமத ஐதிகங்கள் தெரியாதவர்க்கும் உதவும் பொருட்டு இந்நூல் வரலாறுன கதைத் தொடரையும், முடிவுரையையும், சிலதியான ச்லோகங்களின் பொருளேயும் சேர்த்திருக்கிறேன்.

விஷயப் பாகுபாடு செய்து ஊன்றிப்படிக்க விரும்புவோர்க்கு உதவுமாறு (for the benefit of those who want to make an analytical study of the subject), நூலின் விவரணமான பொருளடக்கமும், விஷய சூசிகையும், அரும்பத வகராதியும் (explanatory table of contents, subject-index and Glossary of words and phrases) சேர்த்திருக்கிறேன்.

இதை வெளியிடத் துணிந்ததற்கு ஒரு வார்த்தை சமாதானம் அநுசிதமாயிராது. தற்காலம் கீதை, வித்வான்களுக்கே உரியதாயும், முக்யமாய் அது போதிப்பது அத்வைதமா, த்வைதமா, ஞானமா, கர்மமா, எனத் தர்க்கிப்பதற்கே விஷயமாயும், அவரவர் புத்தி சாதுர்யப்படி தாத்பர்ய நிர்ணயத்திற்குப் பாத்திரமாயுமிருந்து வருகிறது. இதெல்லாம் நம்போன்ற சாமான்யர்க்கு கிரேக்கர்

பாஷையாயிருக்கிறது. தவிர, தீனர்களுக்கு உற்சாகமும், சம்சாரத்தில் தத்தளிப்பவர்க்கு நன்னம்பிக்கையைக் கொணர்ந்து, வாத்ஸல்யம் பொழிந்து மனிதர் யாவரும் தன்னிழப்பையும், அன்பு மலர்ச்சியையும் பெறவேண்டுமென்று ப்ரேமைக்கடலாகிய கீதை ஒவ்வொரு ச்லோகத்திலும், முக்கியமாய் சரம ச்லோகம் எனப்படும் 18-ம் அத்யாயம் 66-ம் ச்லோகத்திலும் உத்கோஷிக்க, அக்கருணை நம்மை ஊடுருவ விடாமல் தடுத்து, அதன் சில எழுத்துக்களை மாத்திரம் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு சிற்றறிவின் குயுக்தி வாதங்களால், பரமாசார்யனின் அகண்ட வாக்குக்கு இதுதான் தீர்ந்த தாத்பர்யம் எனத் தீர்மானிக்க முயல்வது, கட்டுமரங்கொண்டு கடலைக்கடக்க முயல்வதுபோலாகும். ஆகவே, சாமான்யருக்கும் அந்த அன்பின் அழைப்பைப் பரவச் செய்யவேண்டுமென்பது இம் முயற்சியின் முக்ய நோக்கம்.

மேலும் ஆத்ம விசாரம் இல்லாதவர்களுக்கும் வாழ்க்கைத்துறையில் உபயோகப்படும், ஆகாரம், மனோவசம், தெய்வசம்பத்து, அசுர சம்பத்து, கர்மசித்திக்குக் காரணம் முதலிய பல விஷயங்கள் கீதையில் விளக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் இதைப்படிப்போர், இன்னொருவர் வியாக்யானத்தையே எல்லையாகக் கொள்ளாமல், தங்கள் புத்தியையும் உபயோகித்துத் தாங்களே சுயமாய் ஆலோசனை செய்து இதில் சொல்லியிருக்கும் விஷயங்களின் கருத்துக்களில் மனம் ஈடுபட்டு, தங்கள் ஸ்வரூபம் மலர்ந்து வாழ்வை அன்பினால் பூர்த்தி செய்துகொள்வார்களென்று திருவருளைப் ப்ரார்த்திக்கிறேன்.

இதை வெளியிடுவதில் எனக்கு உதவிபுரிந்து, அன்புருவாகிய பகவானின் காரியமாம் இதைப் பூர்த்தி செய்தவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியறிதலை இதன் மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்நூலின்கண் உள்ள குற்றங் குறைகளை எடுத்துக்காட்டி, இதன் உபயோகத்தைப் பெருக்க யோசனைகள் கூறுமாறு நண்பர்களை வேண்டுகிறேன.

6—12—1933
முக்தாலயம்,
ஆரணி,
வட ஆற்காடு.

இப்படிக்கு,

டி. வி. கிருஷ்ணசாமி.

# பொருளடக்கம்.

# ஸ்ரீ பகவத்கீதை வரலாறு.



சம்ஸ்கிருதத்தில் ராமாயணம், மகாபாரதம் எனச் சிறந்த இரு இதிஹாஸங்கள் (historical Epics) உள்ளன. அவ்விரண்டில் மகாபாரதம் ஐந்தாம் வேதம் எனப்படும். இது:—பாராசர (வியாச) ரின் வசன நீரில் வளர்வதும், அமல கீதார்த்தத்தை நறுமணமாகவும், பல உபாக்யானங்களை தண்டுகளாகவும் உடையதும், ஹரி கதைகளைப் போதித்து மலர்ந்திருப்பதும், கலிமலத்தை த்வம்சம் செய்வதுமான பாரதம் என்னும் தாமரையின் தேனை லோகத்தில் தினந்தோறும் குடித்துக்களிக்கும் தேனீக்களாகிய ஸஜ்ஜனருக்கு ச்ரேயஸ் உண்டாகட்டும் – என்று புகழப்பட்டிருக்கிறது.

மகாபாரதம் குருவம்சத்தினராகிய பாண்டவ துர்யோதனாதியரின் சரித்திரத்தைக்கூறுகிறது. அவ்விருதிறத்தாருக்கும், ராஜ்யத்தின் பொருட்டு "குருக்ஷேத்ரம்" என்னுமிடத்தில் ஒரு பெரும் போர் நடந்தது. அது மகாபாரதப்போர் எனப்படும். அதில் கிருஷ்ணன், பாண்டவனான அர்ஜுனனுக்கு தேர்ப்பாகனாயிருந்தான். துர்யோதனராஜனின் தகப்பன், த்ருதராஷ்டிரன் பிறவிக் குருடன். போர் நடக்கையில் அவன் தன் அரண்மனையில் இருந்து கொண்டிருந்தான். துர்யோதனன்கக்ஷியைச்சேர்ந்த சஞ்ஜயன் என்பவன் வியாசமுனியால் ஞானத்ருஷ்டி அளிக்கப்பெற்று போரில் நடந்தவற்றை எல்லாம் அறிந்து, இரவில் போய் திருதராஷ்டிரனிடம் சொல்லிவிட்டு, மறுநாட்காலையில் போரில் வந்து கலப்பான். அப்படிச் சொல்லிவருகையில், போர்த்தொடக்கத்தில் என்ன நடந்ததென்று த்ருதராஷ்டிரன் ஸஞ்ஜயனை வினவினன். இதுதான் கீதை ஆரம்பம். அதற்கு ஸஞ்ஜயன், போர்க்களத்தில் மனக்கலக்கமும் தளர்ச்சியுமுற்ற, அன்பன் அர்ஜுனனுக்கு, ஸ்ரீ கிருஷ்ணன் செய்த பல ரகசிய உபதேசங்களையும் விச்வரூப தரிசனத்தையும் அருட்பொழிவையும் சொல்கிறான். கிருஷ்ணார்ஜுன ஸம்வாத (சம்பாஷணை) ரூபமாகிய இதுதான் பகவத்கீதை.

**இது உபநிஷத்து; பிரம்மவித்தை, யோகசாஸ்திரமு மாகும்.**

இது மகாபாரதத்தில் பீஷ்மபர்வத்தில் உளது.

# கீதை த்யானச்லோகங்களின் பொருள்.

## கீதை வணக்கம்.

1. ஸாக்ஷாத் பகவான் நாரயணன் பார்த்தனுக்கு போதித்ததும், புராணமுனி வியாசர் மகாபாரதமத்தியில் அமைத்ததுமான பகவத்கீதே! அத்வைத அமிர்தத்தை வர்ஷிப்பவளே! பகவதீ! அஷ்டாதச (18) அத்யாயிநீ! பவத்தை வெறுப்பவளே! அம்ப! உன்னை தியானிக்கிறேன்.

2. உபநிஷத்துக்கள் யாவும் பசுக்கள்; கறப்பவன் கோபால நந்தனன்; பார்த்தன் (வத்ஸன்) கன்று; உண்டு ஆனந்தத்தை அனுபவிப்பவர் பரிசுத்த அறிவுடையோர்; மகத்தான கீதாம்ருதமே பால்.

## வியாசர் வணக்கம்.

3. பாரதமாம் எண்ணெய் நிறைந்த ஞானச்சுடர் விளக்கை ஏற்றிய வியாசா! விரிதாமரை யிதழ்க்கண்ணா! விசால புத்தே! உனக்கு நமஸ்காரம்.

## கிருஷ்ணன் துதி.

4. தன்னைச்சரணம் அடைந்தோரின் பாரிஜாதமும், ஒரு கையில் மாடுமேய்க்கும் கோல் கொண்டவனும், ஞான முத்ரையுற்றவனும், கீதையாம் அம்ருதத்தை கறப்பவனுமாகிய கிருஷ்ணனுக்கு நமஸ்காரம்.

5. பீஷ்ம த்ரோணர்களாம் இரு கரைகளும், ஜயத்ரதனும் ஜலமும், காந்தாரமன்னனும் நீலோற்பலமும், சல்யனும் சுறாமீனும், கிருபனும் நீரோட்டமும், கர்ணனும் கரைபுரளும் வெள்ளமும், அச்வத்தாமனும் விகர்ணனுமாம் பயங்கரமுதலைகளும், துர்யோதனனும் சுழலுமுற்றயுத்த நதி பாண்டவர்களால், கேசவனாகிய ஓடக்காரனாலேயே கடக்கப்பட்டது.

6. எவன் கிருபை ஊமையை வாசாலனுக்குகிறதோ, முடவனை மலையை தாண்டும்படி செய்கிறதோ, அப்பரமானந்த மாதவனைப் பணிகின்றேன்.

7. பிரஹ்மா, வருணன், இந்திரன், ருத்ரன், மருத்துக்கள் யாவரும் திவ்ய ஸ்தோத்ரங்களால் எவனைத்துதிக்கின்றனரோ, அங்கம், பதம், உபக்ரமங்களுடன் வேதோபனிஷதங்களால் சாமகர்கள் எவனைப் பாடுகின்றனரோ, த்யானத்தில் ஆழ்ந்து அவனுடன் ஒன்றிய மனத்தால் யோகிகள் எவனைக்காண்கின்றனரோ, எவனது எல்லையை தேவாசுர கணங்களும் அறிகிலரோ, அத்தகைய தேவனுக்கு நமஸ்காரம்.

---



# ஸ்ரீ பகவத்கீதை



## முதல்—பாகம் அத்தியாயம் 1—6.



### அத்தியாயம் 1. அர்ஜுனன் துயரம்

(இடம்: அரண்மனை) திருதராஷ்டிரன்: ஸஞ்ஜயா, தர்ம க்ஷேத்ரமாகிய குருக்ஷேத்ரத்தில், யுத்த ஸந்நத்தராய்க் கூடியிருக்கும் நம்மவரும் பாண்டவரும் என்னசெய்தார்கள்?

ஸஞ்ஜயன்: துரியோதன ராஜன், அணிவகுக்கப்பட்ட பாண்டவ சைனியத்தைப் பார்த்து, ஆசாரியராகிய துரோணரிடம்போய், "ஆசார்யரே, நிபுணனும் உங்கள் சிஷ்யனுமான துருபத புத்ரனால் (த்ருஷ்டத்யும்னனால்) அணிவகுக்கப்பட்ட மகத்தான இந்தப் பாண்டு புத்திரர்களுடைய சைனியத்தைப் பாருங்கள்; யுத்தத்தில் பீமனுக்கும் அர்ஜுனனுக்கும் சமமான சூரர்களும் மகா வில்லாளிகளும் இதில் இருக்கிறார்கள்—யுயுதானன், விராடன், மகாரதனான துருபதன், திருஷ்டகேது, சேகிதானன், வீர்யவானான காசிராஜன், புருஜித், குந்திபோஜன், நரபுங்கவ (உத்தம மனித)னான சைப்யன், விக்ரமசாலியான யுதாமன்யு, ஸுபத்ரா புத்ரன் (அபிமன்யு), த்ரௌபதி புத்ரர்—இவர்கள் எல்லாருமே மகாரதர்கள். த்விஜோத்தமா, நம்மவரிலும் சிறந்த சேனைத் தலைவரை உங்கள் ஞாபகார்த்தம் சொல்லுகிறேன், தெரிந்துகொள்ளுங்கள்.—

தாங்கள், பீஷ்மர், கர்ணன், கூட்டத்திலும் ஜயம்பெறும் கிருபர், அச்வத்தாமா, விகர்ணன், ஸோமதத்தியின் புத்ரன், இன்னும் பல சூரர்களும் எனக்காகத் தத்தம் உயிரையே துறந்தவர்கள்; எல்லாரும் யுத்தவிசாரதர்கள்; நானாவித சஸ்திரப் பிரயோகிகள். ஆயினும் பீஷ்மரால் ரக்ஷிக்கப்படும் நம் சைனியம் நிறைந்ததாகக் காணவில்லை. பீமனால் ரக்ஷிக்கப்படும் பகைவர் படையோ நிறைந்ததாயிருக்கிறது; ஆகையால் நீங்கள் எல்லாரும் தங்கள் தங்கள் வகுப்பிலிருந்துகொண்டு பீஷ்மரையே காக்கவேண்டும்'' என்று சொன்னான். அப்பொழுது கௌரவ பாண்டவர்களுக்குப் பாட்டனும், குருவம்ச விருத்தரும், பிரதாபவானுமான பீஷ்மர், துர்யோதனனுக்கு உற்சாகம் பிறப்பிக்க உரக்கச் சிங்கநாதம்செய்து தன் சங்கத்தை முழக்கினார். உடனே சங்கங்களும், பேரிகைகளும், தம்பட்டங்களும், துந்துபிகளும், கொம்புகளும் திடீரென்று ஒலித்தன. அந்தச் சப்தம் பெரிய ஆரவாரம் செய்தது. பிறகு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய மகாரதத்திலிருந்த மாதவரும், பாண்டவனும் (கிருஷ்ணனும் அர்ஜுனனும்) தங்கள் திவ்ய சங்கங்களை பூரித்தார்கள். ரிஷீகேசர், பாஞ்சஜன்யம் என்னும் சங்கத்தையும், தனஞ்ஜயன் தேவதத்தம் என்னும் சங்கத்தையும், பயங்கரத்தொழில்களைச்செய்பவனும் (பீமகர்மா), வேட்டைநாய் போன்ற வயிறுள்ளவனுமான (வ்ருகோதரன்) பீமன் பௌண்ட்ரம் என்னும் மகா சங்கத்தையும் முறையே ஒலித்தார்கள். குந்திபுத்திரராகிய யுதிஷ்டிர ராஜா அநந்தவிஜயம் என்னும் சங்கத்தையும், நகுலன் ஸுகோஷம் என்பதையும், ஸகதேவன் மணிபுஷ்பகத்தையும் முழக்கினார்கள். ப்ரிதிவீபதே (பூமிக்குத் தலைவனே), பரம வில்லாளியான காசிராஜனும், மகாரதனான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும், விராடனும், அபராஜிதனான (தோல்வியடையாத) ஸாத்யகியும், துருபதனும், துரௌபதி புத்ரர்களும், மகாபாகுவான

ஸுபத்ரா புத்ரனும் (அபிமன்யுவும்) எல்லாப் பக்கங்களிலுமி ருந்து தங்கள் தங்கள் சங்கங்களைத் தனித்தனியே பூரித்தார்கள். அந்தக்கோஷம் ஆகாயத்திற்கும் பூமிக்கும் எதிரொலி செய்து, ஆரவாரித்து, தார்த்தராஷ்டிரர்களின் (துர்யோதனாதியர்களின்) இதயங்களைப் பிளந்தது. மஹீபதே, (பூமிக்குத் தலைவரே) அப்பொழுது சஸ்திரப் பிரயோகம் ஆரம்பிக்கையில், கபித்வஜனான பாண்டவன் (குரங்குக் கொடியையுடைய அர்ஜுனன்) தார்த்தராஷ்ட்ரர் ஸந்நத்தராய் (தயாராய்) நின்றிருப்பதைப் பார்த்து, தன் தனுசை எடுத்துக்கொண்டு ரிஷீகேசரை (கிருஷ்ணனை) நோக்கிச் சொன்னான்: "அச்சுதா, உபயசேனை மத்தியில் என் ரதத்தை ஸ்தாபி (தேரை நிறுத்து) இந்த போர்க்கிளர்ச்சியில் யுத்தத்திற்கு ஆசைப்பட்டு வந்து நிற்பவரும், சண்டையில் நான் எதிர்க்கவேண்டியவருமானவர்களை நான் பார்க்க விரும்புகிறேன். துர்ப்புத்தியாகிய தார்த்தராஷ்டிரனுக்கு (துர்யோதனனுக்கு) யுத்தத்தில் பிரியம் செய்ய விரும்பிச் சண்டைபோட இங்குவந்து கூடியிருப்போரை நான் பார்க்கப்போகிறேன்." பாரதரே, குடாகேசனால் (அர்ஜுனனால்) இப்படிச்சொல்லப்பட்ட ரிஷீகேசர் (கிருஷ்ணன்) அந்த உத்தம ரதத்தை உபயசேனை மத்தியில் பீஷ்மர், துரோணர் மற்றுமுள்ள எல்லா அரசர்களுக்கும் எதிரில் ஸ்தாபித்து, "பார்த்தா, இங்குக் கூடியிருக்கும் கௌரவர்களைப் பார்" என்றார்.

அப்பொழுது பார்த்தன் உபயசேனையிலும், பிதாக்களும், (முறையில் தகப்பனார்களும்) பாட்டனார்களும், ஆசார்யர்களும், மாமன்களும், உடன்பிறந்தவர்களும், புத்திரர்களும், பேரன்களும், தோழர்களும், மாமனார்களும், நண்பர்களும் நிற்பதைப் பார்த்தான். பந்துக்களான அவர்கள் எல்லாரும் நிற்பதை அக்கௌந்தேயன் பார்த்து, பரமகிருபை மேலிட்டுப் பின் வருவனவற்றைச் சொன்னான்:—

"கிருஷ்ண, யுத்தம்செய்ய விரும்பிக்கூடியிருக்கும் இந்த ஸ்வஜனங்களைப் பார்த்து என் அவயவங்கள் சோர்கின்றன, வாய் உலர்கிறது, உடல் நடுங்குகிறது, மயிர் சிலிர்க்கிறது, காண்டீபம் கையிலிருந்து நழுவுகிறது, மேல்தோல் எரிகிறது, நிற்கவும் எனக்குச் சக்தியில்லை, என் மனம் ப்ரமிக்கிறது. கேசவ, நான் அபசகுனங்களைப் பார்க்கிறேன். யுத்தத்தில் ஸ்வஜனங்களை ஹதம்செய்வதில் என்ன ச்ரேயஸ் (புகழ்) உண்டாகும் என்பதை நான் காணவில்லை. கிருஷ்ண, நான் ஜயத்தையாவது, ராஜ்யத்தையாவது, சுகத்தையாவது விரும்பவில்லை. கோவிந்தா, ராஜ்யமும் சுகமும் ஜீவனமும் எதற்காக நமக்கு வேண்டும்? யார்பொருட்டு ராஜ்யம் போகம் சுகம் இவைகளை விரும்புவோமோ அவர்கள் தங்கள் பிராணனையும் தனத்தையும் தியாகம்செய்ய யுத்தத்தில் இதோநிற்கிறார்கள்: ஆசார்யர்கள், பிதாக்கள், புத்ரர்கள், பிதாமகர் (பாட்டனர்), மாமன்மார், மாமனர்கள், பௌத்திரர்கள் (பேரன்கள்), மைத்துனர்கள், சம்பந்திகள். நான் கொல்லப்பட்டாலும், த்ரிலோக ராஜ்யத்திற்காகவும் நான் இவர்களைக் கொல்லவிரும்பேன். கேவலம் பூமிப்பொருட்டா? ஜனார்த்தன, தார்த்தராஷ்டிரர்களைக் கொல்வதால் நாம் என்ன பிரீதி அடைவோம்? இப்பாதகரை அதம்செய்வதால் பாவமே நம்மைச்சேரும். ஆகையால் பந்துக்களாகிய தார்த்தராஷ்டிரர்களை வதிக்க நாம் தகுந்தவரல்லேம்; மாதவ, ஸ்வஜனங்களைக் கொன்று நாம் எப்படி சுகிப்போம்? ஜனார்த்தன, லோபத்தால் அபகரிக்கப்பட்ட சித்தத்தையுடைய இவர்கள் குலக்ஷயத்தால் விளையும் தோஷத்தையும் மித்ர துரோகமாகிய பாதகத்தையும் பார்க்காவிட்டாலும், குலநாசத்தின் தோஷத்தையறியும் நாம் இப்பாபத்திலிருந்து நிவிருத்தியாகாமல் எப்படி இருப்போம்? குலக்ஷயத்தால், ஸநாதனமான குலதர்மம் அழிகிறது. குலதர்மம் நஷ்டமாகவே, அதர்மம் அக்குல முழுதையும் கவர்கிறது. கிருஷ்ண, அதர்மம் சூழ்வதால் குலஸ்திரீகள் கெட்டுப்போகிறார்கள். வார்ஷ்ணேய,

(வ்ருஷ்ணி குலத்தோனே) ஸ்திரீகள் துஷ்டராயின் ஜாதிக் கலப்பு உண்டாகிறது. வர்ண ஸங்கரத்தால் (ஜாதிக்கலப்பால்) குலநாசம் செய்தவர்க்கும், அக்குலத்தார்க்கும் நரகமே சம்பவிக்கும். இவர்களுடைய பித்ருக்களும், பிண்டமும் உதகக்கிரியையும் (சிரார்த்தம்) இழந்து தங்கள் நிலையிலிருந்து விழுகிறார்கள். வர்ண ஸங்கரகாரரான (ஜாதிக்கலப்பு செய்யும்) இக்குல நாசகாரரின் தோஷத்தால், சாஸ்வதமான ஜாதி தர்மமும், குலதர்மமும் அழிக்கப்படுகின்றன. ஜனார்த்தனா, குலதர்மம் அழிந்த மனுஷ்யர்களுக்கு, நரகவாசம் நிச்சயம் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஐயோ! நாம் ராஜ்ய சுகத்துக்கு ஆசைப்பட்டு, ஸ்வஜனங்களையும் கொல்ல முன்வந்து மகத்தான பாபத்தைச் செய்ய சித்தராய் இருக்கிறோம். ரணகளத்தில் சஸ்திரமில்லாமலும், எதிர்க்காமலும் இருக்கும் என்னை சஸ்திரபாணிகளாய் (ஆயுதம் ஏந்திய கையுடையவர்களாய்) தார்த்தராஷ்டிரர்கள் அதம் செய்வார்களானால், அதுவே எனக்கு க்ஷேமதரமாய் இருக்கும்.

சஞ்ஜயன்: (திருதராஷ்டிரனுக்கு):—இப்படிச்சொல்லி அர்ஜுனன் போர்க்களத்தில் தன் வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டுச் சோகத்தால் மனமுடைந்தவனாய் ரதத்தின் ஆசனத்தின்மேல் சாய்ந்தான்.

---

## அத்யாயம் 2. சாங்க்ய யோகம். புத்தி யோகம்.

சஞ்ஜயன்: இப்படி கிருபை மேலிட்டுக் கண்ணீர் நிரம்பிக் கலங்கின கண்களோடு துக்கிக்கும் அவனுக்கு மதுஸூதனர் (ஸ்ரீ பகவான் கிருஷ்ணன்) சொன்னார்:—

அர்ஜுனா, அநார்யர்களுக்கே தக்கதும், ஸ்வர்க்கத்தைத் தடுப்பதும், அகீர்த்திகரமுமான இந்த மனச்சோர்வு இந் நெருக்கடியில் உனக்கு எங்கிருந்து வந்தது? பார்த்தா, தைன்யத்தையடையாதே, இது உனக்குத்தகாது. பரந்தபா, இழிந்த இந்த ஹ்ருதயதுர்ப்பலத்தை உதறிவிட்டு எழுந்திரு

அர்ஜுனன்: மதுஸூதனா, பூஜைக்கு அர்கரான பீஷ்மரையும் துரோணரையும் நான் போரில் அம்புகளால் எப்படி எதிர்ப்பேன்? அரிஸூதனா, மகானுபாவர்களாகிய குருமார்களை அதம் செய்வதைவிட இந்த லோகத்தில் பிச்சையெடுத்துண்பது மேலானது. நம் இதத்தைக்கோரும் குருக்களைக் கொல்வதால் ரத்தம் தோய்ந்த போகத்தைப் புஜிப்பவனுவேன். தவிர, நாம் அவர்களை ஜயிப்போமோ, அவர்கள் நம்மை ஜயிப்பார்களோ என்பதை யறியோம். யாரைக் கொன்ற பிறகு நாம் பிழைத்திருக்கவும் விரும்போமோ, அந்த தார்த்தராஷ்டிரர்களே நம் எதிரில் நிற்கிறார்கள். தைன்யத்தால் அபகரிக்கப்பட்ட ஸ்வபாவனுய், தர்மம் இன்னதென்று தெரியாமல் மயங்கின மனத்துடன் உன்னைக் கேட்கிறேன். எது ச்ரேஷ்டமோ அதை நிச்சயமாய் எனக்குச் சொல். நான் உன்சிஷ்யன், உன்னைச் சரணம் அடைந்தவன். எனக்கு உபதேசி. பூமியில் நிகரற்றதும் சம்ருத்தமு (நிறைந்தது) மான ராஜ்யமாவது, சுரருடைய ஆதிபத்தியமாவது பெறினும், என் இந்த்ரியங்களை உலர்த்தும் இந்த மனச்சோர்வைப் போக்கக்கூடியது எதையும் நான் காணவில்லை.

சஞ்ஜயன்: குடாகேசன் (அர்ஜுனன்) ரிஷிகேசரை (கண்ணனை)ப் பார்த்து இப்படிச் சொல்லி அப்பரந்தபன், பின்னும் "நான் போர்புரியமாட்டேன்" என்று கோவிந்தரிடம் சொல்லிச் சும்மா இருந்தான். பாரதரே, உபயசேனை மத்தியில் விசனித்திருக்கும் அவனைப்பார்த்து புன்னகை செய்து கண்ணபிரான் இவ்வசனத்தைச் சொன்னார்:—

## ஸ்ரீ பகவான் (உபதேச ஆரம்பம்).

துக்கிக்கத் தகாதவரைப்பற்றி நீ துக்கிக்கிறாய்; ஆனால் தெரிந்தவனைப்போல் பேசுகிறாய். பிராணன் போனவர்களைப் பற்றியும் பிராணன் போகாதவர்களைப்பற்றியும் அறிஞர் துக்கியார். நானாவது நீயாவது மற்றுமிந்த ஜனத்தலைவர் (ஜனாதிபர்) களாவது எப்பொழுதாவது இல்லாமலுமில்லை; இனி இராதிருப்பதுமில்லை; தேகத்தில் இருக்கும் ஜீவன், இத்தேகத்திலேயே கௌமாரம், யௌவனம், ஜரை (கிழத்தனம்) என்பவைகளை யடைவதுபோல், வேறு தேகத்தையும் அடைகிறான். தீரர் இதில் மயங்கார். கௌந்தேயா, விஷயஸ்பர்சங்கள் (உணர்ச்சி) சீதளம் உஷ்ணம், சுகம் துக்கம் முதலியவற்றைக்கொடுக்கும். அவை வருவன போவன; அநித்யமானவை. பாரதா, நீ அவற்றைப் பொறுத்துக்கொள். புருஷரிஷப, (புருஷக்காளையே) எந்தத் தீரனை இவை பாதிக்காவோ, சுகதுக்கங்களைச் சமமாகப் பார்க்கும் அத்தீரன் சாவாநிலையாகிய அம்ருதத்திற்கு உரியவனாகிறான்.

அசத்துக்கு இருப்பு இல்லை. சத்துக்கு இன்மை இல்லை. தத்வதரிசிகள் இவ்விரண்டின் முடிவையும் கண்டறிந்திருக்கிறார்கள். இவர்கள் எல்லாரிலும் வ்யாபித்திருப்பது நாசமற்றதென்றறி. அழிவற்ற அதை யாராலும் நாசம் செய்யமுடியாது. பாரதா, அநாசனும், அப்ரமேயனும், (அறிய முடியாதவன்) நித்யனுமான சரீரியின் (ஆத்மாவின்)

இத் தேகங்கள் தாம் முடிவுடையனவாகச் சொல்லப்பட்டிருக்கிறது; ஆகையால் யுத்தம்செய். இச்சரீரியைக் கொல்பவனாக அறிபவனும், கொல்லப்படுவானாக நினைப்பவனும் இருவரும் அறியாதவர்களே. சரீரி கொல்வதுமில்லை, கொல்லப்படுவதுமில்லை. இவன் பிறக்கிறதுமில்லை, இறக்கிறதுமில்லை; ஒருகால் இருந்து பின்பு இல்லாமற்போவதுமில்லை. இவன் அஜன் (பிறப்பற்றவன்); நித்யன், சாச்வதன், புராணன். சரீரம் கொல்லப்பட்டாலும் இவன் கொல்லப்படுகிறதில்லை. பார்த்தா! இவனை அவிநாசன், நித்யன், அஜன், எப்பொழுதும் குறைவற்றவன் என்று அறியும் புருஷன் யாரைக்கொல்வான்? யாரால் கொல்லப்படுவான்? நைந்துபோன வஸ்திரங்களைப்போட்டுவிட்டுப் புதிய வஸ்திரங்களை நரன் (மனிதன்) தரிப்பதுபோல, இத் தேகியும் ஜீர்ணமான சரீரங்களை விட்டுவிட்டுப் புதியனவேறு பொருந்துகிறான்.

இவனைச் சஸ்திரங்கள் (ஆயுதங்கள்) சேதிக்கா; நெருப்பு தகிக்காது; ஜலம் நனைக்காது, காற்று உலர்த்தாது. இவன் சேதிக்க முடியாதவன், தகிக்கமுடியாதவன், நனைக்கமுடியாதவன், உலர்த்த முடியாதவன், நித்யன், ஸர்வகதன் (எங்கும் இருப்பவன்), ஸ்தாணு (த்ருவன்), அசலன். இவன் ஸநாதனன். இவன் அவ்யக்தன், அசிந்த்யன் (சிந்திக்கமுடியாதவன்) விகாரம் அடையாதவன் என்று சொல்லப்படுகிறான். ஆதலால், இதை அறிந்து நீ துக்கிக்கலாகாது.

மகாபாகோ (பெருந்தோளாய்), அப்படி ஆத்மாவை நித்யம் பிறப்பவனாகவும் இறப்பவனாகவும் நீ நினைத்தாலும், அதற்காகவும் நீ துக்கிக்கத் தகாது. ஜனித்தவனுக்கு மிருத்யு நிச்சயம்; மரித்தவனுக்கு ஜன்மம் நிச்சயம். ஆகையால் பரிகாரம் இல்லாத இவ்விஷயத்தில் நீ சோர்வு அடையக்கூடாது. பாரதா, பூதங்கள் ஆதியிலும் அந்தத்திலும் அவ்யக்தமாயும் (தோன்றாமலும்), மத்தியில் வ்யக்தமாயும் இருக்கின்றன.

எதற்காகத் துயரம்? இந்த ஆத்மாவை ஆச்சர்யம்போல ஒருவன் பார்க்கிறான். மற்றொருவன் இவனை ஆச்சர்யம் போலச் சொல்கிறான். இன்னொருவன் இவனை ஆச்சர்யம் போலக் கேட்கிறான். கேட்டாலும் இவனை ஒருவனும் அறிகிற தில்லை. பாரதா எல்லாருடைய தேகத்திலும் இருக்கும் இவன் வதிக்கமுடியாதவன். ஆகையால் ஸர்வ பூதங்களுக்காகவும் நீ துயரப்படக்கூடாது.

உன் ஸ்வதர்மத்தைக் கவனித்தும் நீ நடுங்கக்கூடாது. க்ஷத்ரியனுக்கு தர்மயுத்தத்தைக்காட்டிலும் ச்ரேயஸ் தரக்கூடியது வேறொன்றுமில்லை. பார்த்தா, திறந்திருக்கும் ஸ்வர்க்க வாயிலாகவும், தானாகவே நேர்ந்திருக்கும் இவ்வித யுத்தம் நேர்ந்தால் க்ஷத்ரியர்கள் சுகிகளே. அப்படிப்பட்ட இந்தத் தர்மயுத்தத்தை நீ செய்யாவிடில், ஸ்வதர்மத்தையும் கீர்த்தியையும் இழந்து பாவத்தை யடைவாய். உன் குறையாத அபகீர்த்தியை ஜனங்கள் பேசுவார்கள். வெகுமதிக்கப்பட்டவர்களுக்கு அப்பேர்ப்பட்ட அபகீர்த்தி மரணத்திலும் கொடியது நீ பயத்தினால் ரணத்திலிருந்து விலகினாய் என்று மகாரதர்கள் உன்னை நினைப்பார்கள். அவர்களால் நன்கு மதிக்கப்பட்ட நீ சிறுமையை அடைவாய். உனக்கு இதமில்லாதவர்கள் உன் சாமர்த்தியத்தை நிந்தித்து, பல சொல்லத்தகாத வார்த்தைகளையும் சொல்லுவார்கள்; அதைவிட துக்ககரமானது எது? கொல்லப்பட்டால் நீ ஸ்வர்க்கம் அடைவாய்; ஜயித்தால் பூமியை ஆள்வாய்; ஆகையால் கௌந்தேயா, நீ யுத்தம் செய்ய நிச்சயித்து எழுந்திரு. சுகம் துக்கம், லாபம் அலாபம், ஜயம் அபஜயம், ஆகிய த்வந்த்வங்களைச் சமமாகக் கருதி யுத்தத்தில் கல. அப்படிச் செய்தால் பாவம் அடையமாட்டாய்.

## புத்தியோகம்.

இதெல்லாம் ஸாங்க்ய யோகத்தின்படி உனக்குச் சொல்லப்பட்டது. எந்த புத்தியுக்தனுய்க் கர்மபந்தங்களைச் சிதறுவாயோ அந்த புத்தியோகத்தையும் கேள். இதில் முயற்சி வீண்போகாது. இதில் தவறுதலும் கிடையாது. இந்த தர்மத்தை ஸ்வல்பம் அநுஷ்டித்தாலும் அது மகத்தான பயத்தினின்றும் காப்பாற்றும். இதில் நிச்சயபுத்தி ஒன்று தான் வேண்டியது. நிச்சயம் இல்லாதவருடைய புத்திகள் பல பிரிவுபட்டு அநந்தமாயிருக்கும். பார்த்தா, வேதவார்த்தைகளில் ரமிக்கும் அறிவிலர் தேனெழுகும் மலர்போன்ற வார்த்தைகளை மாத்திரம் சொல்லுகிறுர்கள். "இதன்றி வேறில்லை" என்று வாதிக்கிறுர்கள். இவர்கள் காமிகள், ஸ்வர்க்கபரர்கள் (ஸ்வர்க்கத்தைப் பரமாகக்கொண்டவர்கள்); ஜன்மத்தையும், கர்ம பலத்தையும் கொடுக்கும் பலவிதக் கிரியைகளைச் செய்துகொண்டு, போகம், ஐச்வர்யம் இவைகளை அடைதலையே கதியாகக் கொண்டவர்கள். யோக ஐச்வர்யங்களில் பற்றுள்ளவர்கள். அவற்றுல் அபகரிக்கப்பட்ட சித்தத்தையுடைய அவர்களுக்கு ஸமாதியில் ஆத்ம நிச்சயபுத்தி உண்டாகாது. அர்ஜுன, வேதங்கள் ஸத்வம், ராஜஸம், தாமஸம், ஆகிய முக்குணங்களைப்பற்றியவை. நீ அம்முக்குணங்களைக்கடந்து, த்வந்த்வங்களற்று, நித்ய ஸத்வத்தில் நிலைபெற்று, யோகக்ஷேமங்களைக் கருதாமல் ஆத்மஞானியாயிரு. எங்கும் ஜலம் நிறைந்த இடத்தில் ஒரு குட்டை எவ்வளவு உபயோகமோ அவ்வளவுதான் ஞானமுள்ள ப்ராமணனுக்கு ஸர்வ வேதங்களும் உபயோகப்படும். அதாவது—அவனுக்கு வேண்டியடையத்தக்கது வேறென்றுமில்லை யென்றபடி. கர்மம் செய்வதற்கு மாத்திரம் நீ அதிகாரியேயன்றி, ஒரு நாளும் அதன் பலத்திற்கு அதிகாரியல்ல. பலத்தை ஏதுவாகக்கொண்டு ஒரு காரியம் செய்யாதே கர்மம் செய்யாமலே இருத்தலிலும் பற்று அடையாதே. தனஞ்சய, பற்

றற்று, புத்தியோகத்தில் அமர்ந்து, ஸித்தி அஸித்தி இரண்டி லும் சமமாய் இருந்துகொண்டு கர்மங்களைச் செய். ஸமத்வம் தான் (Poise) யோகம் எனப்படும், தனஞ்ஜய, இப்புத்தியோ கத்தைக்காட்டிலும் காம்யகர்மம் வெகு தாழ்ந்தது. ஆகையால் புத்தியை (Intelligence)ச் சரணமடை. பலத்தை (ப்ரயோ ஜனத்தை) ஏதுவாகக்கொண்டவர் க்ருபணர்களே (misers). யுக்தமான புத்தியைக்கொண்டு ஒருவன் ஸுக்ருதம், துஷ்க்ரு தம், ஆகிய இரண்டையும் விடுகிறான். ஆகையால் இந்த புத்தி யோகத்தில் அமர். யோகம் எனப்படுவது கர்மம் செய்வதில் திறமைதான். விவேகிகள் கர்மம் செய்வதிலிருந்து விளையும் யுக்த புத்தியுடன், பலத்தைத் துறந்து, ஜன்மபந்த முக்தராய் துன்பமற்ற பதத்தை யடைகிறார்கள். எப்பொழுது உன் புத்தி மோகக் கலக்கத்தைக் கடக்குமோ, அப்பொழுது கேட் கத்தக்கதிலும், கேட்கப்பட்டதிலுமிருந்து நீ ஒழிவு உற்று இருப்பாய். வேதக் கோட்பாடுகளைப்பற்றிக் கேட்கப்பட்ட வைகளால் கலைந்திருக்கும் உன் புத்தி ஒருமைப்பட்டு எப் பொழுது நிச்சல சமாதியில் நிலைத்திருக்குமோ அப்பொழுது நீ மேற்சொன்ன யோகத்தை யடைவாய்.

அர்ஜுனன் :—கேசவ, சமாதியில் நிலைத்தப்ராஞ்ஞை (அறிவு) யோடிருப்பவனுடைய லக்ஷணம் என்ன? அப்படி நிலைத்த புத்தியுடையவன் எப்படிப் பேசுவான், எப்படி உட்காருவான், எப்படி நடப்பான்?

ஸ்ரீ பகவான் :—தன் மனதில் புகும் ஸர்வ காமங்களை யும் துறந்து, தன் ஆத்மாவிலேயே தன் ஆத்மாவால், சந்துஷ்டி அடைபவன் ஸ்திதப்ராஞ்ஞன் (யோகத்தில் நிலைத்த புத்தி யுடையவன்) எனப்படுவான். துக்கத்தால் கலங்காத மன முடையவனும், சுகத்தில் இச்சையற்றவனும் (one who does not seek comfort), ராகம் (பற்று), பயம், க்ரோதம்

இவை நீங்கினவனும் ஸ்திதப்ரஞ்ஞன் எனப்படுவான். எவன் எதிலும் ஒட்டாமல், சுபம்நேருமிடத்து மகிழ்கிறதுமில்லை -யோ, அசுபம் நேருமிடத்து த்வேஷிக்கிறதுமில்லையோ, அவனுடைய ப்ரஞ்ஞை நிலைத்தது. ஆமையானது வெளியிலிருந்து தனக்கு ஒரு பயம் நேரிடும்போது தன் உறுப்புகளைச் சட்டென்று உள்ளிழுத்துக்கொள்வதுபோல, எவன் விஷயங்களிலிருந்து தன் புலன்களை (இந்திரியங்களை) உள்ளடக்கிக்கொள்ளுகிறானோ அவனுடைய ப்ரஞ்ஞை நிலைத்தது. விஷயங்கள் தேகி (தேகத்தையுடையவன்)யின் நிராகாரத்தால் (உணவு இன்மையால்) விலகுகின்றன. ஆனால் அவற்றில் ருசிமாத்திரம் அவனுக்கு இருக்கும். அவன் பரத்தைத் தரிசித்ததும் அந்தருசியும் விலகிவிடும். கௌந்தேயா, நியமமுள்ள விவேகியான புருஷனுடைய மனசைக்கூட இந்திரியங்கள் கலக்கித் தீவிரமாய் இழுத்துக்கொண்டுபோகும். அவை யெல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி, என்னைப் பரமாகக்கொண்டு யுக்தமான மனசுடன் இருக்கவேண்டும். யாருக்கு அவன் இந்திரியங்கள் வசமோ அவன் ப்ரஞ்ஞை நிலைத்தது. புருஷன் விஷயங்களைத் த்யானிப்பதிலிருந்து அவனுக்கு அவற்றில் ஸங்கம் (பற்று) பிறக்கிறது. ஸங்கத்திலிருந்து காமமும் (அவாவும்); காமத்திலிருந்து க்ரோதமு (சினமு)ம், பிறக்கிறது. க்ரோதத்திலிருந்து மோஹம் (மதிமயக்கம்) உண்டாகிறது. மோகத்திலிருந்து ஞாபகத்தடுமாற்றம் (மறதி); அம்மறதியிலிருந்து புத்திநாசம் சம்பவிக்கிறது. புத்தி நாசத்தால் அவன் அழிகிறான். ராகத்வேஷங்களை விட்டு (விருப்பு வெறுப்பின்றி — free from likes and dislikes) தன் வசமான இந்திரியங்களையும் ஸ்வாதீன சித்தத்தையும் உடையவன் (a man with self-possession) விஷயங்களில் செல்லினும், சாந்தி (மனத்தெளிவு) அடைகிறான். அச்சாந்தியில் அவனுக்குச் சர்வ துக்க நிவிருத்தி ஏற்படுகிறது. சாந்த சித்தத்தை யுடையவனுக்கு, சீக்கிர

மாகவே புத்தி நிலைக்கிறது. இந்திரிய ஸ்வாதீனமில்லாதவனுக்குப் புத்திகிடையாது. இந்திரிய ஸ்வாதீனமில்லாதவனுக்குப் பாவனை (meditation) யுமில்லை. பாவனை இல்லாதவனுக்குச் சாந்தி இல்லை. சாந்தி இல்லாதவனுக்குச் சுகம் ஏது ? ஒருவன் மனசு அவனுடைய சலிக்கும் இந்திரியங்களை அநுசரிக்குமாயின், காற்று ஒரு ஓடத்தை ஜலத்தில் தன் போக்குப்படி இழுப்பதுபோல, அம்மனம் அவனுடைய புத்தியையும் தன்னோடு சேர்த்து இழுக்கும். ஆகையால் மகாபாகோ, எவனுடைய இந்திரியங்கள் இந்திரியவிஷயங்களிலிருந்து எப்பொழுதும் நிக்ரகிக்கப் பட்டிருக்கின்றனவோ, அவனுடைய ப்ரஞ்ஞை நிலைத்தது. ஸர்வ பூதங்களுக்கும் (ஜீவராசிகளுக்கும்) எதுநிசியோ (அவை ப்ரஞ்ஞையற்றிருக்குமோ) அவ்விருளில் இந்திரியங்களை ஜயித்தயோகி பூர்ண ப்ரஞ்ஞையோடு இருப்பான். எவ்விருளில் பூதங்கள் (creatures) விழித்திருக்குமோ அவ்விருள் ஆத்ம தர்சனம் செய்யும் யோகிக்கு இரவு ஆகும். சமுத்திரத்தில் ஜலப்ரவாகங்கள் ப்ரவேசித்தும், அச்சமுத்திரம் தன்னில் நிறைந்து தன் ஸ்திதிகடவாது இருப்பதுபோல், எவனொருவன் தன்னுள் ஸர்வ காமங்கள் ப்ரவேசித்தும், தன்னில் நிறைந்து தன்னிலைகடவாதிருக்கிறானோ அவன் சாந்தி அடைகிறான். விஷயங்களை (sense-objects) விரும்புகிறவன் சாந்தி அடையமாட்டான். சர்வ காமங்களையும் துறந்து கோரிக்கையற்று அகங்கார மமகாரமில்லாத மனிதன் சாந்தி அடைகிறான். பார்த்தா, இதுதான் பிரம்மநிலை. இதையடைந்து எவனும் மயங்கமாட்டான். அந்தியகாலத்திலேனும் இதில் நிலைபெற்றவன் பிரம்ம நிர்வாணம் (ஆநந்தநிலை) அடைகிறான்.

## அத்யாயம் 3. கர்மயோகம்.

அர்ஜுனன்: ஜனார்த்தனா, கேசவா, கர்மயோகத்தைக் காட்டிலும் புத்தியோகம் சிறந்ததென்பது உன் மதமானால், என்னை ஏன் கோரமான கர்மத்தில் ப்ரவிருத்திப்பிக்கிறாய்? இருவித வாக்யங்களால் நீ என்னை மயக்குகிறாய்போலிருக்கிறது. எது ஒன்றைச்செய்து நான் ச்ரேயஸை யடைவேனோ அதை எனக்கு நிச்சயித்துச் சொல்.

ஸ்ரீ பகவான்: தோஷமற்றவனே, சாங்கியர்களின் ஞானயோகமும் புத்தியோகிகளின் கர்மயோகமும் ஆகிய இவ்விருவித நிஷ்டைகளும் என்னால் பூர்வம் உலகில் சொல்லப்பட்டன. கர்மங்களை ஆரம்பிக்காததினாலேயே ஒரு புருஷன் நைஷ்கர்மிய (கர்மமற்ற) நிலையை அடையமாட்டான். வெறும் சன்யாசத்தினால் ஒருவன் சித்திபெறமாட்டான். உண்மையில் ஒரு மனிதனும் ஒரு நிமிஷமாவது கர்மம் செய்யாமல் இருக்கிறதில்லை. ப்ரக்ருதியிலிருந்துண்டான ஸத்வம், ரஜஸ் தமஸ் என்கிற குணங்களால் எல்லாரும் தங்கள் ஸ்வாதீனமில்லாமலே கர்மம் செய்விக்கப்படுகிறார்கள். கர்மேந்த்ரியங்களை மாத்திரம் அடக்கிக்கொண்டும், மனதினால் இந்திரிய விஷயங்களை ஸ்மரித்துக்கொண்டும், மேலுக்கு சும்மா இருக்கும் மூடாத்மா கள்ளாசாரன் (hypocrit) எனப்படுகிறான். அர்ஜுனா, எவன் தன்மனதால் இந்திரியங்களை அடக்கி எதிலும் பற்றின்றி, கர்மேந்திரியங்களால் கர்மம் செய்ய ஆரம்பிக்கிறானோ அவன் ச்ரேஷ்டன். நீ உனக்கு நியதமான (உன் ஸ்வபாவத்துக்கேற்ற) கர்மாவைச் செய். அகர்மத்தைக் காட்டிலும் கர்மம் மேலானது. அகர்மத்தால் (கர்மம் செய்யாததால்) சரீர யாத்திரைகூட சித்திக்காது. (By non-work even the maintenance of the body will be impossible.) யஞ்ஞார்த்தம் இன்றி வேறு (போகார்த்தம்)

கர்மங்களைச் செய்வதால்தான் இந்த ஜனங்களைக் கர்மம் பந்திக்கிறது. ஆகையால், கௌந்தேயா, நீ பற்று நீங்கி கர்மம் செய்.

பூர்வம் ப்ரஜாபதி யஞ்ஞங்களையும் ப்ரஜைகளையும் சிருஷ்டித்து, ப்ரஜைகளைப் பார்த்து பின்வரும் வசனத்தைச் சொன்னார் :— "இந்த யஞ்ஞங்களைச்செய்து நீங்கள் அபிவிருத்தியடையுங்கள். இவை உங்களுக்கு இஷ்டகாம்யங்களை (விருப்பங்களை) பூர்த்திசெய்யட்டும். இவற்றால் நீங்கள் தேவர்களை ஆராதியுங்கள். அத்தேவர்களும் உங்களை ஆதரிப்பார்கள். இப்படி நீங்களும் தேவர்களும் பரஸ்பரம் (ஒருவருக்கொருவர்) உபகாரம் செய்துகொண்டு பரம ச்ரேயஸை (கீர்த்தியை) யடைவீர்கள். யஞ்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்கள் உங்களுடைய இஷ்டபோகங்களைக் கொடுப்பார்கள்". அவர்களால் கொடுக்கப்படு மவைகளைத் திரும்பி அவர்களுக்கு அர்ப்பிக்காமல் புஜிப்பவன் திருடனே. யஞ்ஞ மிகுதியை சாப்பிடும் நல்லோர் சர்வ பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள். தாமே தின்பதற்காக சமைக்கும் பாபிகள் அமேத்யத்தை (எச்சிலைச்) சாப்பிடுகிறவர்களே. ப்ராணிகள் அன்னத்தைப் புஜித்து விருத்தியடைகின்றன. அன்னம் மழையிலிருந்து உண்டாகிறது. மழை யஞ்ஞத்தால் பெய்கிறது. யஞ்ஞம் கர்மத்தால் உண்டாகிறது. கர்மம் பிரம்மத்திலிருந்து பிறக்கிறதென்று தெரிந்துகொள். பிரம்மம் அக்ஷரத்திலிருந்து தோன்றுகிறது. ஆகையால் எங்கும் இருக்கும் பிரம்மம் யஞ்ஞத்தில் நித்யம் ப்ரதிஷ்டை (நிலை) யாயிருக்கிறது. இப்படிப் ப்ரவிருத்திக்கும் சக்கரத்தை அநுசரிக்காதவன் பாவ வாழ்வினன்; அவன் இந்த்ரியங்களில் ரமிப்பவன்; பார்த்தா, அவன் ஜீவித்திருப்பது வீணே. ஆத்மாவில் ரமிக்கிறவனும், ஆத்மாவில் திருப்தி அடைகிறவனும், ஆத்மாவிலேயே சந்துஷ்டி அடைபவனுமான மனிதன் செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. அவனுக்கு இங்கு காரியத்தில்

வது அகாரியத்திலாவது ஒருபொருட்டுமில்லை. ஸர்வ பூதங்களையும் எதற்காகவும் அவன் ஆச்ரயிக்கவேண்டியதில்லை. ஆகையால் ஸங்கத்தை விட்டு சததம் (இடைவிடாது) கார்ய கர்மம் (செய்யவேண்டிய கர்மத்தைச்) செய். ஸங்கமின்றிக் கர்மம் செய்யும் புருஷன் பரத்தை யடைகிறான்.

ஜனகாதியோர் கர்மங்களால்தான் சித்திபெற்றார்கள். லோக சங்கிரகார்த்தமும் நீ கர்மம் செய்யத்தக்கவன். எதை எதை ச்ரேஷ்டர்கள் ஆசரிக்கிறார்களோ அதை அதை இதர ஜனங்களும் ஆசரிக்கிறார்கள். அவர்கள் எதை ப்ரமாணமாக்குகிறார்களோ அதை லோகம் அநுவர்த்திக்கிறது (பின்பற்றுகிறது). த்ரிலோகத்திலும் நான் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. பார்த்தா, நான் இதுவரையில் அடையாமல் இனி அடையவேண்டியதும் ஒன்றுமில்லை; எனினும் நான் கர்மத்தில் வர்த்திக்கிறேன் (இருக்கிறேன்) பார். பார்த்தா, ஓயாமல் எப்பொழுதும் நான் கர்மத்தில் வர்த்திக்காமற் போனால், என் வழியையே மனுஷ்யர்கள் சர்வவிதத்தாலும் அநுவர்த்திப்பார்கள். நான் கர்மம்செய்து காட்டாவிட்டால் இந்த ஜனங்கள் எல்லாரும் அழிந்துபோவார்கள். நான் அவர்கள் குழப்பத்துக்குக் கர்த்தா ஆவேன்; இந்த ப்ரஜைகளைக் கொன்றவனும் ஆவேன். பாரதா, அவித்வாம்சர் (கற்றறியாதவர்) எப்படிப் பற்றுடன் கர்மங்களைச் செய்கிறார்களோ, அப்படி வித்வான் லோக ஸங்கிரகத்தைவிரும்பி, பற்றற்றுக் கர்மங்களைச் செய்யவேண்டும். கர்மத்தில் பற்றுள்ள அஞ்ஞானிகளுக்கு புத்திபேதம் விளைவிக்கக்கூடாது. வித்வான் யுக்தமனசுடன், சர்வ கர்மங்களைத் தானும் செய்துகொண்டு, பிறர்க்கும் அவற்றை ஸ்வாரஸ்யமுடையவை (ருசியுள்ளவை) யாக்கவேண்டும்.

ப்ரக்ருதியின் ஸத்வ, ரஜஸ், தமஸ், என்கிற குணங்களே எங்கும் கர்மங்களைச் செய்கின்றன. அகங்காரமுள்ள மூடாத்மா தாந்தான் கர்த்தா என்று நினைக்கிறான். மகாபாகோ,

முக்குண கர்மவிபாகங் (பிரிவு) களின் தத்வத்தை உணர்ந்தவன், குணங்கள் குணங்களில் நிகழ்கின்றன, என்று எண்ணித் தான் ஒன்றிலும் பற்றுக்கொள்ளமாட்டான். மேற்சொன்ன ப்ரக்ருதி குணங்களை யறியாத மூடர்கள்தான், அக்குணங்களாலேயே ஆகும் கர்மங்களில் பற்றுதலடைகிறார்கள். பூர்ண ஞானமில்லாத அந்த மந்தர்களைப் பூர்ணமாய் அறிந்தவன் சலிக்கச் செய்யக்கூடாது.

ஸர்வகர்மங்களையும் எனக்கு அர்ப்பித்து, ஆத்ம சிந்தையுடன், நிராசியாய், மமதையைவிட்டு தாபம் நீங்கி யுத்தம் செய். அசூயை இன்றி ச்ரத்தையுடன் இந்த என் மதத்தை அநுஷ்டிக்கும் மனிதர்கள் தங்கள் கர்மங்களினின்றும் விடுதலையடைகிறார்கள். அசூயைகொண்டு இந்த என் மதத்தை யநுஷ்டிக்காதவர் ஒருவித ஞானமுமில்லாத மூடர் என்றும், கெட்டுப்போனவரென்றும், அசேதனர் என்றும், தெரிந்துகொள். ஞானவானும்கூட தன் ஸ்வபாவத்திற்கேற்பவே நடக்கிறான். ஸர்வ பூதங்களும் தங்கள் ஸ்வபாவத்தை யநுசரிக்கின்றன. நிக்ரஹம் என்ன செய்யும்? இந்திரியங்களுக்கு இந்திரிய விஷயங்களில் ராகமும் த்வேஷமும் (attraction and repulsion) ஏற்பட்டிருக்கின்றன. ஒருவன் இவ்விரண்டின் வசம் அகப்பட்டுக்கொள்ளக்கூடாது. இவை மனிதனுக்குத் தடைகள் (hindrances). சரியாய் செய்யப்படும் பரதர்மத்தைக்காட்டிலும், குணக்குறைவாக செய்யப்படும் ஸ்வதர்மம் ச்ரேஷ்டமானது. (கீழ் 18-ம் அத். பார்க்க.) ஸ்வதர்மத்தில் இறத்தலும் ச்ரேஷ்டம். பரதர்மம் பயத்தை யளிக்கும்.

அர்ஜுனன்:— வார்ஷ்ணேய (விருஷ்ணி குலத்தோன்றலே), புருஷன் எதனுல் தூண்டப்பட்டு, தான் விரும்பாதிருப்பினும், எதோ ஒன்றால் பலாத்காரமாய் நிர்ப்பந்திக்கப்பட்டவன்போல், ராகத்வேஷங்களால் உண்டாகும் இந்தப் பாபத்தைச்செய்கிறான்?

ஸ்ரீ பகவான்:—அதுதான் காமம்; அதுதான் க்ரோதம்; ரஜோகுணத்திலிருந்து உத்பவிப்பது (உண்டாவது). அதற்கு எவ்வளவு தீனிபோட்டும் முடியாது (மகா அசனன்); அது மகாபாபி. அதை இங்கு மனிதனுக்கு வைரியாக (சத்ருவாக) அறி. நெருப்பு புகையாலும், கண்ணாடி தூசியாலும், கரு கருப்பையாலும் மூடப்பட்டிருப்பதுபோல, ஞானம் காமத்தால் சூழப்பட்டிருக்கிறது. கௌந்தேயா, நிரப்பமுடியாத தீயை ஒத்த காமரூபமான அது ஞானத்தைச் சூழ்ந்துகொண்டு, ஞானிக்கு நித்யவைரியாய் இருக்கிறது. இந்திரியங்களும், மனமும், புத்தியும், அதற்கு இருப்பிடமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது ஞானத்தைச் சூழ்ந்துகொண்டு அவைகளால் தேகியை மோகிப்பிக்கிறது. ஆகையால், பாதரிஷப, நீ முதலில் உன் இந்திரியங்களை வசப்படுத்திக்கொண்டு, ஞான விஞ்ஞான நாசனும், பாபியுமான இந்தக் காமத்தைக் கொல். இந்திரியங்கள் உத்தமமானவை என்கிறார்கள். இந்திரியங்களைக்காட்டிலும் மனம் உத்தமமானது; மனதைக்காட்டிலும் புத்தி உத்தமமானது; புத்திக்கும் உத்தமமானவன் ஆத்மா—"அவன்". மகாபாஹோ, இப்படி புத்தியைக்காட்டிலும் பரமனை, "அவனை" அறிந்து உன்னாலே உன்னை நிதானப்படுத்திக்கொண்டு, வெல்லுதற்கரிய காமரூபியாகிய இந்த சத்ருவைக் கொல்.

---

## அத்யாயம் 4. ஞான விபாகயோகம்.

ஸ்ரீபகவான்:— அழிவற்ற இந்த யோகத்தை சூர்யனுக்கு நான் சொன்னேன். அதை சூரியன் மனுவுக்குச் சொன்னான். மனு இக்ஷ்வாகுவுக்குச் சொன்னான். இப்படி பரம்பரையாக வந்த இதை ராஜரிஷிகள் அறிந்திருந்தார்கள். பரந்தபா, இந்த மகத்தான யோகம் காலாதிகத்தால் இவ்வுலகில் நஷ்டமாய்விட்டது. நீ என் தோழனும் பக்தனுமானதால் உனக்கு இன்று இந்த உத்தம ரகஸ்யமாகிற புராதன யோகத்தைச் சொன்னேன்.

அர்ஜுனன்:—உன் ஜன்மம் பிற்பட்டது. சூர்யன் ஜன்மம் முற்பட்டது. அப்படியிருக்க சூர்யனுக்கு இதை நீ ஆதியில் சொன்னாய் என்பதை நான் எப்படி அறிவேன்?

ஸ்ரீபகவான்:— அர்ஜுன, உனக்கும் எனக்கும், வெகு ஜன்மங்கள் கழிந்திருக்கின்றன. அவையெல்லாம் எனக்குத் தெரியும். பரந்தபா, நீ அவைகளை அறியாய். அஜனும் குறைவற்றவனும், பூதங்களுக்கு ஈஸ்வரனுமான நான், என் ப்ரக்ருதியிலிருந்துகொண்டு என் மாயையால் பிறக்கிறேன். பாரதா, எப்போதெப்போது தர்மம் குலைந்து அதர்மம் தலையெடுக்கிறதோ, அப்போதப்போது நான் என்னை அவதரிப்பிக்கிறேன். துஷ்டர்களை நாசம்செய்து சாதுக்களை ரக்ஷித்துத் தர்மத்தை ஸ்தாபிக்கும் பொருட்டு, யுகத்துக்கு யுகம் நான் சம்பவிக்கிறேன். அர்ஜுனா, எவன் என் திவ்ய ஜன்ம கர்மதத்வத்தை இப்படி அறிகிறானோ அவன் தன் தேகத்தை விடுங்கால் புனர்ஜன்மம் அடைகிறதில்லை, என்னையே அடைகிறான். ராகம் பயம் க்ரோதம் இவை நீங்கினவர் பலர் என் மயமாய் என்னை ஆச்ரயித்துக்கொண்டு, ஞான தவத்தால் பாவனர்களாய் என் பாவத்தை (ஸ்வரூபத்தை) அடைந்

திருக்கிறார்கள். என்னை யார் எப்படி வழிபடுகிறார்களோ அப்படியே நான் அவர்களை அநுக்ரஹிக்கிறேன். மனுஷ்யர்கள் எங்கும் என் வழியையே அநுவர்த்திக்கிறார்கள் (பின்பற்றுகிறார்கள்). கர்மங்களின் சித்தி விரும்புவோர் இங்கு தேவதைகளை ஆராதிக்கிறார்கள்; மனுஷ்ய லோகத்தில் கர்ம சித்தி சீக்கிரமாகவே விளைகிறது.

குணம் கர்மம் இவற்றின் பாகுபாட்டுப்படி நான்கு வர்ணங்கள் என்னால் ச்ருஷ்டிக்கப்பட்டன. (18-ம் அத். பார்க்க). நான் அதற்குக் கர்த்தாவாயினும் செயலற்றவனும் குறைவற்றவனும் என்றறி. கர்மங்கள் என்னை ஒட்டுகிற தில்லை. நானும் கர்மபலனை விரும்புகிறதில்லை. எவன் என்னை இப்படி அறிகிறானோ, அவன் கர்மத்தால் பத்தனாகிறதில்லை. பூர்வர்களான முமுக்ஷுக்கள் இவ்விதம் அறிந்து கர்மம் புரிந்தார்கள். ஆகையால் தொன்று தொட்டு பூர்வர்களால் செய்து வரப்பட்ட கர்மத்தை நீயும் செய்.

கர்மம் எது, அகர்மம் எது என்பதில் கவிகளும் மோஹிக்கிறார்கள். அவ்வித கர்மத்தைப்பற்றி உனக்குச் சொல்லுகிறேன். அதைத் தெரிந்துகொண்டு அசுபத்திலிருந்து நீ விடுபடுவாய். கர்மம், விகர்மம், அகர்மம் இவை என்னென்னவென்று தெரிந்து கொள்ளவேண்டியது. கர்மத்தின் வழி ஆழ்ந்தது. எவன் கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் பார்க்கிறானோ அவன் மனுஷ்யர்களுள் புத்திமான், அவன் யுக்தன், பூர்ணகர்மம் செய்பவன். எவன் சர்வகர்ம ஆரம்பங்களிலும் தன் காம சங்கல்பத்தை விலக்கி தன் ஞானாக்னியால் தகிக்க(எரிக்க)ப்பட்ட கர்மத்தைச் செய்கிறானோ அவன் பண்டிதன், அறிஞன் எனப்படுகிறான். கர்ம பலத்தில் ஸங்கத்தைவிட்டு நித்ய த்ருப்தியுடன் ஒருவரையும் ஆச்ரயிக்காதவன் கர்மத்தில் ப்ரவிருத்தித்தாலும்

அவன் ஒரு கார்யமும் செய்கிறதில்லை. நிராசியாய், ஸ்வாதீன சித்தத்துடன் இருப்பவன், சர்வ பரிக்ரகங்களையும் விட்டு (ஒன்றையும் கைப்பற்றாமல்) சரீரத்தால் மாத்திரம் கர்மம் செய்துகொண்டு, பாபத்தை அடைகிறதில்லை. யத்ருச்சையாய் (தானாய்)க் கிடைக்கும் லாபத்தால் சந்துஷ்டியடைந்து, த்வந்த்வங்களுக்கு அதீதனாய், மாச்சர்யம் (பொறாமை) இன்றி, சித்தி அசித்தி இரண்டிலும் சமமாய் இருப்பவன் கர்மம்செய்யினும் பந்த (கட்டு) ப் படுகிறதில்லை. ஸங்கம் அற்றவன், முக்தன் (a man free from prejudices), ஞானத்தில் நிலைபெற்ற சித்தத்தை யுடையவன், இன்னான் யஞ்ஞத்தின் பொருட்டு ஆசரிக்கும் கர்மம் முழுதும் நீங்கி விடுகிறது.

ப்ரம்மமாகிய அக்னியில், ப்ரம்மமாகிய அவிஸ் (நெய்) ப்ரம்மத்தால் ப்ரம்மார்ப்பணமாக ஆகுதி செய்யப் படுகிறது. இவ்விதம் பிரம்மகர்ம சமாதியிலிருப்பவனால் அடையத்தக்கது பிரம்மம்தான். சிலயோகிகள் தங்கள் யஞ்ஞத்தால் தேவதைகளை உபாசிக்கிறார்கள். வேறுசிலர் ப்ரம்மமாகிய அக்னியில் ப்ரம்மமாகிய நெய்யை ஓமம் செய்கிறார்கள். அன்னியர் சிலர் ச்ரோத்ரம் (கேட்டல்) முதலிய இந்த்ரியங்களை, நிக்ரஹம் (அடக்குதல்) என்கிற அக்னியில் ஓமம் செய்கிறார்கள். இன்னும் சிலர் சப்தாதி விஷயங்களைத் தத்தமக்கேற்ற இந்த்ரியாக்னியில் ஓமம் செய்கிறார்கள், (ie by means of regulated enjoyments.) ஞான தீபம் ஏற்றப்பட்டவர்கள் தங்களுடைய சர்வ இந்திரிய கர்மங்களையும் ப்ராண கர்மங்களையும் ஆத்ம நிக்ரக யோகாக்னியில் ஓமம் செய்கிறார்கள். சிலர் த்ரவ்ய யஞ்ஞத்தையும், சிலர் தபோ யஞ்ஞத்தையும், சிலர் புத்தியோக யஞ்ஞத்தையும் செய்கிறார்கள். முயற்சியோடு கூடி, கடின வ்ரதத்தை அநுஷ்டிப்ப

வர் அத்யயனம் (வேதம் ஓதுதல்), ஞான யஞ்ஞம் என்னும் இவைகளைச் செய்கிறார்கள். ப்ராணாயாம பராயணர்கள் (ப்ராணாயாமத்தை முக்யமாக அநுஷ்டிப்பவர்) சிலர் ச்வாசத்தின் ப்ராண அபானகதிகளை ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு, அபானத்தில் ப்ராணத்தையும், ப்ராணத்தில் அபானத்தையும் ஓமம் செய்கிறார்கள். இவர்கள் எல்லாரும் யஞ்ஞத்தை யறிந்தவர்கள். யஞ்ஞத்தால் கல்மஷம் நீங்கினவர்கள். (மாசு அற்றவர்கள்) யஞ்ஞ மிச்சமான அம்ருதத்தைப் புஜிப்பவர்கள் ஸநாதனமான ப்ரம்மத்தை யடைகிறார்கள். யஞ்ஞம் செய்யாதவர்க்கு இவ்வுலகமே கிடையாது. குரு ஸத்தமா, அன்னிய (பர) லோகம் ஏது? இப்படிப் பலவித யஞ்ஞங்கள் ப்ரம்ம முக (வேத)த்தில் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் கர்மத்திலிருந்து பிறப்பன வென்றறி. அப்படி அறிந்தால் நீ விடுபடுவாய்.

பரந்தபா, திரவிய சாதனத்தால் செய்யும் யஞ்ஞத்தைக் காட்டிலும் ஞான யஞ்ஞமே சிரேஷ்டமானது. பார்த்தா, சர்வ கர்மமும் மிச்சமின்றி ஞானத்தில் பரிசமாப்தி (பூர்த்தி) அடைகிறது. தத்வ தரிசிகளான ஞானிகளை நமஸ்கரித்து அவர்களுக்குப் பணிவிடைசெய்து, அவர்களிடமிருந்து இந்த ஞானத்தைக் கேட்டுத் தெரிந்துகொள். அவர்கள் உனக்கு உபதேசிப்பார்கள். பாண்டவா, இதை யறிந்த பிறகு நீ மறுபடியும் மோஹத்தில் விழமாட்டாய். இந்த ஞானத்தால் பூதங்களை சேஷமில்லாமல் உன் ஆத்மாவில் அதாவது என்னில் பார்ப்பாய். நீ சர்வ பாபிகளைக் காட்டிலும் பாபக்ருத்தமனாய் இருந்தாலும், சர்வ பாபத்தையும் ஞான ஓடத்தால் கடப்பாய். அர்ஜுனா, எரியும் நெருப்பு எப்படிக் கட்டைகளைப் பஸ்மமாக்குகிறதோ, அப்படி ஞானாக்னி சர்வ கர்மங்களையும் பஸ்மம் (சாம்பல்) ஆக்கும். இகத்தில் (இம்மையில்) பவித்ரமாக்கக்கூடியது ஞானத்துக்கு ஸத்ருசமானது

(ஒப்பானது) வேறொன்றுமில்லை. அந்த ஞானத்தை யோக சித்தர்கள் தக்க காலத்தில் தாங்களே ஆத்மாவில் காண்கிறார்கள். ச்ரத்தையுள்ளவன், ஞானத்தைப் பரமாகக்கொண்டவன், இந்திரிய வசமுள்ளவன், இப்படிப்பட்டவனுக்கு ஞானம் லபிக்கிறது. ஞானம் உண்டானதும் தாமதமின்றி அவன் ப்ரமசாந்தி அடைகிறான். அஞ்ஞனும் (அறிவிலன்) அச்ரத்தனுமான (சிரத்தையில்லாதவன்) சம்சயாத்மா (சந்தேகப் பிராணி) நசிக்கிறான். சம்சயாத்மாவுக்கு இக லோகமாவது பர லோகமாவது சுகமாவது கிடையாது. தனஞ்ஜய, புத்தி யோகத்தால் சன்னியசிக்கப்பட்ட கர்மாவைச் செய்பவனும், சம்சயத்தை (சந்தேகத்தை) ஞானத்தால் சேதித்த (பிளந்த) வனுமான ஆத்மவந்தனைக் கர்மங்கள் பந்திக்கா. ஆகையால், பாரதா, அஞ்ஞானத்தால் பிறந்ததும் ஹ்ருதயத்தை இடமாகக்கொண்டதுமான இந்த சம்சயத்தை ஆத்ம ஞானக்கத்தியால் சின்னம்செய்து, புத்தியோகத்தை அப்யசி, எழுந்திரு.

---

## அத்யாயம் 5. கர்ம சந்யாச யோகம்.

அர்ஜுனன்:— க்ருஷ்ணா, கர்ம சன்னியாசத்தையும், மறுபடியும் கர்ம யோகத்தையும் புகழ்கிறாய். இவையிரண்டில் எது ச்ரேஷ்டமோ அதை எனக்கு நிச்சயமாய்ச் சொல்.

ஸ்ரீ பகவான்: கர்ம சந்யாசம் கர்மயோகம் இவை இரண்டுமே உத்தம ச்ரேயஸை கொடுக்கக்கூடியவை. ஆயினும் அவை இரண்டில் கர்ம சந்யாசத்தைக்காட்டிலும் கர்ம யோகம் சிறந்தது. மகாபாகோ, எவன் த்வேஷிக்கிறதுமில்லையோ விரும்புகிறதுமில்லையோ, எவன் த்வந்த்வங்களுக்கு உட்படாதவனோ அவன் நித்ய சந்யாசி என்று அறியத்தக்கவன். அவன் சுகமாகவே பந்தங்களிலிருந்து விடுபடுகிறான். சாங்கியம் வேறு, யோகம் வேறு என்று பாலர்தான் சொல்லுவார்களேயன்றி பண்டிதர் சொல்லார். ஒன்றில் நிலைபெற்றவன் இரண்டின் பலத்தையும் சேர்த்து அடைகிறான். சாங்கியத்தால் அடையப்படும் ஸ்தானம் யோகத்தாலும் அடையப்படுகிறது. சாங்க்யமும் யோகமும் ஒன்றென்று எவன் காண்கிறானோ அவனே காண்கிறான். மகாபாகோ, யோகமில்லாதவன் சந்யாசம் அடைவது கஷ்டம். யோகயுக்த முனி ப்ரம்மத்தை அதிககாலமின்றி அடைகிறான். யோகயுக்தனும், சுத்தாத்மாவும் ஆத்மஜித்தும் (தன்னை வென்றவனும்) ஜிதேந்த்ரியனும் (இந்த்ரியங்களை வென்றவனும்) தானே (சர்வ ஜீவன்களின் ஆத்மாவெனத் தேர்ந்தவன் கர்மங்கள் செய்யினும் அவைகளால் தீண்டப்படான். தத்வத்தை யறிந்தவன் யோகயுக்தனாய், "நான் ஒன்றும் செய்கிறதில்லை," என்று நினைக்கிறான். பார்த்தல், கேட்டல், ஸ்பர்சித்தல் (தொடுதல்), முகர்தல், உண்ணுதல், செல்லுதல், தூங்குதல், சுவாசித்தல், பேசுதல், விடுதல், பற்றுதல், கண்களைத் திறத்தல் மூடுதல், இவையெல்லாம் இந்திரியங்கள் இந்திரிய விஷ

யங்களில் நிகழ்தல், என்றே கொள்கிறான். எவன் தான் செய்யும் கர்மங்களை ப்ரம்மத்துக்கு அர்ப்பித்து, ஸங்கத்தை விட்டுச்செய்கிறானோ, அவனை ஜலம் பத்மபத்ரத்தில் (தாமரை இதழில்) ஒட்டாததுபோல், பாவம் ஒட்டாது. யோகிகள் ஸங்கத்தைவிட்டு தங்கள் ஆத்ம சுத்தியின்பொருட்டுக் கேவலம் சரீரம், மனம், புத்தி, இந்திரியங்கள் இவற்றால் மாத்திரம் கர்மாவைச் செய்கிறார்கள். யோகயுக்தன் கர்மபலத்தில் இச்சையைத் துறந்து, பரம சாந்தி அடைகிறான். அயுக்தன் காமகாரணத்தால், பலத்தில் பற்றுடையவனாய்ப் பத்தனாகிறான். தன்னைத்தான் வச்யம்செய்துகொண்ட தேஹி, சர்வ கர்மங்களையும் மனசால் சந்யசித்து, நவத்வாரபுரி (ஒன்பது வாயிலுள்ள பட்டணம்) ஆகிய தன் உடம்பில் சுகமாய் வீற்றிருந்துகொண்டு, தான் ஒன்றும் செய்வதுமில்லை செய்விப்பதுமில்லை. பிரபுவாகிய இந்த ஆத்மா லோகத்திற்கு கர்த்ருத்வத்தை (கர்மம் செய்யும் தன்மையை) யாவது கர்மங்களையாவது, கர்மபல சம்பந்தத்தையாவது பிறப்பிக்கிறதில்லை. அவனவன் ஸ்வபாவமே ப்ரவிருத்திக்கிறது, அந்த விபு (பிரபு) வாகிய ஆத்மா யாருடைய பாபத்தையாவது ஸுக்ருதத்தை யாவது ஏற்கிறதில்லை. ஞானம் அஞ்ஞானத்தால் மூடப்பட்டிருக்கிறது. அதனால் ஜந்துக்கள் மோஹிக்கிறார்கள். எவர்களுடைய ஆத்ம ஞானத்தால் அந்த அஞ்ஞானம் நாசமாக்கப் படுகிறதோ, அவர்களுடைய ஞானம் சூரியனைப் போன்ற பிரம்மத்தைப் பிரகாசிப்பிக்கும். அந்த ஆத்ம ஞானத்திலேயே புத்தியும், அதிலேயே மனமும், அதே நிஷ்டை (த்யானம்) ஆக்வும் உடையவராய், அதையே பரம ஆச்ரயமாகவும் கொண்டு ஞானத்தால் தங்கள் கல்மஷம் (மனமலம்) போக்கினவர்கள், திரும்பிவராத மோக்ஷத்தை யடைகிறார்கள்

கல்வியும் வணக்கமும் நிறைந்த ப்ராமணன், பசு, யானை, நாய், நாயைப் பாகம் செய்து தின்னும் சண்டாளன் இவர்க

ளெல்லாரிடத்திலும் பண்டிதர் சமதர்சிகள். சமத்வத்தில் மனம் ஸ்தாபிக்கப்பட்டவர்களால் இங்கேயே சம்சாரம் ஜயிக்கப்படு கிறது. பிரம்மம் நிர்த்தோஷமு (தோஷமற்றது)ம் எல்லா ரிடத்தும் சமமுமாயிருப்பதுபற்றி, அவர்கள் பிரம்மத்தில் நிலைத்தவர்கள். ஸ்திர புத்தியுடையவனும், மூடத்தனமற்றவ னும், பிரம்மத்தை அறிந்தவனும், ப்ரம்மத்தில் நிலை பெற்ற வனுமானவன் பிரியம் நேர்ந்தால் மகிழவும் மாட்டான், அப் பிரியம் நேர்ந்தால் கலங்கவும் மாட்டான். வெளி விஷய அநு ப்வங்களில் ஸங்கத்தைவிட்டு, தன் ஆத்மாவிலேயே சுகம் காண்கிறவன் பிரம்மத்தில் கலந்த மனமுடையவனாய், அக்ஷய மான (குறைவற்ற, அழிவில்லாத) சுகத்தை அநுபவிக்கிறான். ஸ்பர்ச ஜனித (வெளி உணர்ச்சியால் ஏற்படும்) போகங்கள் துக்க யோனிகளே (Pleasures to satisfy craving and resulting from external contact are only hot - beds of sorrow). கௌந்தேயா, புத்திமான்கள் ஆதி அந்தமுள்ள அவற்றில் ரமிக்கார். சரீர விமோக்ஷணத்துக்கு முன் னால் எவன் இங்குக் காமத்தாலும் க்ரோதத்தாலும் வரும் வேகத்தைப் பொறுக்க சக்தனோ அவனே யோக யுக்தன், அவனே சுகியான நரன். அந்தராத்மாவிலேயே சுகிப்பவனும், அந்தராத்மாவிலேயே ரமிப்பவனும், அந்தராத்மா ஜோதியுமா யிருக்கும் அந்த யோகி ப்ரம்ம ஸ்வரூபனாய், பரப்ரம்மத்தை யடைகிறான். கல்மஷம் க்ஷீணித்தவர்கள், த்வந்த்வங்களைச் சேதித்தவர்கள், நியமமுள்ளவர்கள், சர்வ பூத ஹிதோரதர்கள் (சர்வ பூதங்களுக்கும் இதத்தைச் செய்வதில் சந்தோஷிப்ப வர்) ஆகிய ரிஷிகள் பிரம்ம நிர்வாணம் அடைகிறார்கள்.

காமக்ரோதங்களை விட்ட, ஸ்வாதீன சித்த, யதிகளான ஆத்ம தரிசிகளுக்கெங்கும் பிரம்மாநந்தம் திகழ்கிறது. வெளி ஸ்பர்சங்களை (விஷய உணர்ச்சிகளை) அப்புறப்படுத்தி, கண் களை இரு புருவங்களின் மத்தியில் இருத்தி, நாசிகையில்

(மூக்கில்) சஞ்சரிக்கும் ப்ராண அபான வாயுக்களைச் சமப் படுத்தி, இந்திரியங்கள் மனம் புத்தி இவைகளைச் சுவாதீனப் படுத்தினவன், மோக்ஷ பராயணன் (மோக்ஷத்தையே நாடுப வன்), இச்சை பயம் க்ரோதம் இவை நீங்கினவன் ஆன முனி சதாமுக்தனே. அவன் என்னை யஞ்ஞ தவங்களுக்குப் போக்தாவாகவும் (அநுபவிக்கிறவனாகவும்), சர்வலோக மகேச் வரனாகவும், சர்வ பூதங்களுக்கும் நண்பனாகவும் அறிந்து சாந்தியை அடைகிறான்.

---

## அத்யாயம் 6. அத்யாத்மயோகம்.

ஸ்ரீ பகவான் :— கர்ம பலத்தை ஆசரிக்காமல் செய்யத் தக்க காரியத்தைச் செய்பவனே சந்யாசி, யோகி — அக்னி வளர்க்காதவனும் கிரியைக ளற்றவனுமல்ல. பாண்டவா, எதைச்சந்யாசம் என்கிறார்களோ அதையே யோகம் என்றறி. சங்கல்பத்தைவிடாத எவனும் யோகியாகான். யோகத்தில் விருத்தியடையவிரும்பும் முனிக்குக் கர்மம் காரணம் என்று சொல்லப்படுகிறது. அதே முனி யோகநிலை அடைந்த பிறகு அவனுக்குச்சமம் காரணம் என்று சொல்லப்படுகிறது. இந்திரிய விஷயங்களிலும், கர்மங்களிலும் ஸங்கம் இன்றி சர்வ சங்கல்பத்தையும் விட்டவன் யோக ஆரூடன் (யோகநிலை பெற்றவன்) எனப்படுகிறான்.

ஒருவன், தன்னாலே தன்னை உயர்த்திக்கொள்ளவேண்டும். தன்னைத்தான் இழிவாக்கிக்கொள்ளக்கூடாது. ஒருவன் தானே தனக்குப் பந்து ; தானே தனக்குச் சத்துரு. தன்னைத் தான் ஜயித்தவன் தனக்குப் பந்து. அனாத்மன் தானே தன் சத்ருவைப்போல் நிகழ்வான். தன்னைத்தான் வென்றவன் ப்ரசாந்தன், பரமாத்மா, சீதோஷ்ணம் சுகதுக்கம் அதுபோலவே மான அவமானங்களிலும் சமமாயிருப்பான் ; ஞானத்திலும் விஞ்ஞானத்திலும் திருப்தி அடைவான். ஆத்மாவில் அசையாமல் நிலைபெற்றிருப்பவ (கூடஸ்த)னும், ஜித இந்திரியனும், மண்ணாங்கட்டி, கல், பொன் இவைகளைச் சமமாய்ப் பாவிக்கும் யோகியும் யுகதன் எனப்படுகிறான். அன்பன், நண்பன், சத்துரு உதாஸீனன், மத்யஸ்தன், த்வேஷி, பந்து, சாது, பாபி ஆகிய எல்லாரிடத்தும் சம புத்தியுள்ளவன் ச்ரேஷ்டன் யோகி ஏகாந்தமாய் ரகஸ்யத்திலிருந்து கொண்டு நியம சித்தத்துடன், நிராசியாய், பரிக்ரகித்தலில்லாமல் ஸததம் (இடைவிடாது) ஆத்மாவில் அமரவேண்டும். அவன் சுசி

யான இடத்தில் அதிக உயரமும் தாழ்வும் இல்லாமல், தர்ப்பை, மான்தோல், வஸ்திரம் இவைகளை ஒன்றன் மேல் ஒன்ருகப் போட்டுத், தனக்காக ஒரு ஸ்திரமான ஆசனம் ஏற் படுத்திக்கொண்டு, அந்த ஆசனத்தில் உட்கார்ந்து, மனதை ஏகாக்ரமாக்கிச் சித்தத்தையும் இந்திரியங்களையும் ஸ்வாதீனப் படுத்தி, ஆத்மசுத்தியின் பொருட்டு யோகத்தில் அமரவேண் டும். அவன் ப்ரசாந்தாத்மாவாய் (சாந்தனுப்) பீதி (பயம்) நீங்கி, பிரம்மசர்ய வ்ரதத்தில் நிலைத்துத் தன் மனதை நியமப் படுத்தி, சித்தத்தை என்னிடத்தில் செலுத்தி, உடல் கழுத்து சிரசு இவைகளைச் சமமாகவும் அசலமாகவும் (அசையா மலும்) நிறுத்தி, திசைகளைப்பாராமல் தன் மூக்கு நுனியைப் பார்த்துக்கொண்டு, என்னையே பரமாக பாவித்து யுக்தமனச னுய் இருக்கவேண்டும். நியதமான மனசுடைய யோகி இப் படி சதா ஆத்மாவில் அமர்ந்து, என்னில் ஸ்திரமாயுள்ளதும் ஆநந்த பரமுமான சாந்தியை அடைகிருன். அதிகமாய் உண்பவனுக்கும், சுத்தமாய் உண்ணுதவனுக்கும், அதிகமாய் உறங்குபவனுக்கும் அதிகமாய் விழித்திருப்பவனுக்கும் யோ கம் கைகூடாது, யுக்த (மிதமான, அளவோடு கூடிய) ஆகார வியவகாரங்களுடையவனும், யுக்த பரிச்ரமத்தோடு கர்மங் களைச் செய்பவனும், யுக்த தூக்கமும் விழிப்புமுள்ளவனுக்கு துக்க ஹானி (நிவிருத்தி) க்கான யோகம் ஏற்படுகிறது. சர்வகாமங்களையும் விரும்பாது நியம சித்தத்துடன் ஒருவன் தன் ஆத்மாவிலேயே அமரும்போது "யுக்தன்" எனப்படு கிருன். காற்றில்லாத விடத்தில் எப்படி தீபம் சலிக்கா திருக்குமோ, அதற்கு உபமானமாக நியம சித்தத்தையுடைய யோகியின் ஆத்ம யோகம் நினைக்கப்படுகிறது.

யோகசேவையால் வசம் செய்யப்பட்ட ஒருவன் மனம் எதில் ஆறுதலடையுமோ, அவன் தன்னுள் தானே ஆத்ம தரிசனம் செய்து எதில் சந்தோஷிப்பானே, இந்திரியங்

களுக்கு அகோசரமும் (எட்டாததும்), ஸ்வானுபவத்தால் உணர்தற்குரியதுமான முடிவான சுகத்தை அவன் எதில் அறிவானோ, எதில் நிலைபெற்று அவன் தத்வத்திலிருந்து (உண்மையிலிருந்து) சலிக்கானோ, எது லபித்த (கிடைத்த) பின் அதைவிடவேறு லாபத்தை அவன் நினைக்கானோ, எதில் ஊன்றி அவன் பெரிய துக்கத்தினாலும் சலிக்கமாட்டானோ, அதைத் துக்க சம்பந்தமில்லாத யோகம் எனப்படுவதாக அறியவேண்டும். இந்த யோகத்தை நிச்சய புத்தியோடும் உற்சாகமான மனசுடனும் அப்யசிக்கவேண்டும்.

சங்கல்பத்தால் பிறக்கும் சர்வ காமங்களையும் சேஷமில்லாமல் த்யஜித்து (விட்டு), நாலாபக்கமும் செல்லும் இந்திரியக் கூட்டத்தைத் தன் மனதால் நியமப்படுத்தி, உறுதியுறு தன் புத்தியால் கொஞ்சம் கொஞ்சமாய் ஆறுதலடைய வேண்டும். மனதை ஆத்மாவில் சேர்த்து எதையும் நினைக்காமலிருக்கவேண்டும் ("above the sea of thought"). சஞ்சலமும் அஸ்திரமுமான மனம் வெளியே செல்லும்போதெல்லாம் அதை நியமப்படுத்தி ஆத்மாவிற்கே வசப்படுத்த வேண்டும். ப்ரசாந்த மனமுடையவனும் ரஜோகுணம் சாந்தமடையப் பெற்றவனும் பிரம்மஸ்வரூபனும், அகல்மஷனு (மாசற்றவனு) மான இந்த யோகிக்கு உத்தம சுகம்கிடைக்கிறது. கல்மஷம் நீங்கினயோகி இவ்வாறு சதா ஆத்மத்யானம் செய்துகொண்டு பிரம்ம ஸம்ஸ்பர்சத்தால் (அநுபவத்தால்) வரும் அத்யந்த சுகத்தைச் சுலபமாய் அநுபவிக்கிறான். எல்லாவற்றிலும் சமத்ருஷ்டியுள்ள யோகயுக்தாத்மா ஸர்வ பூதங்களிலும் தன் ஆத்மாவையும், தன் ஆத்மாவில் சர்வபூதங்களையும் பார்க்கிறான். எவன் எல்லாவற்றிலும் என்னையும், என்னில் எல்லாவற்றையும் பார்க்கிறானோ, அவனுக்கு நான் மறையமாட்டேன். எனக்கும் அவன் மறையமாட்டான். (He will no longer remain obscure.) சர்வபூதங்களிலும்

ஸரிது

(எல்லாஜீவன்களிலும்) நிலைபெற்றிருக்கும் என்னை எவன் ஏகத்வமாகிய (ஒருமைத்தாகிய) தன் ஆத்மாவில் ஊன்றி பஜிக்கிறானோ, அந்த யோகி எவ்விதம் இருந்தாலும் என்னிடமே இருக்கிறான். அர்ஜுனா, எல்லார்க்கும் நேரும் சுகத்தையும் துக்கத்தையும், எவன் தனக்கு நேர்ந்ததுபோல் பார்க்கிறானோ, அந்த யோகி சிரேஷ்டனென்று கருதப்படுகிறான்.

அர்ஜுனன் :— மதுசூதனா, உன்னால் சொல்லப்பட்ட சர்வபூத சமதரிசனத்தால் (எல்லாஜீவன்களையும் சமமாய்ப் பார்ப்பதால்) வரும் இந்த யோகத்திற்கு ஸ்திரமான ஸ்திதி, மனசின் சஞ்சலத்தன்மையால், நான் காணவில்லை. கிருஷ்ணா, மனசு சஞ்சலமானது; ப்ரமிக்கச்செய்கிறது. அது பலசாலி, திருடசாலி, வாயுவைக்கட்டுவதுபோல் அதை நிக்ரஹிப்பது (அடக்குவது) முடியாத காரியம். ("you cannot bind the air in your fists nor the waters in your garments.")

ஸ்ரீ பகவான்:— மகாபாகோ, சலனமுள்ள மனசை நிக்ரஹிப்பது கஷ்டமே. சம்சயமில்லை (சந்தேகமில்லை.) கௌந்தேயா, ஆனால் அது அப்பியாசத்தினாலும் வைராக்யத்தினாலும் க்ரகிக்கப்படுகிறது. மனசை வசப்படுத்தாதவனுக்கு யோகம் ப்ராபிக்கிறது (நேருவது) அரிதென்று என் அபிப்ராயம். மனசை வசப்படுத்தின ஆத்மாவால், உபாயங்களைக் கொண்டு முயற்சிசெய்து, யோகம் பெறல் சாத்தியமாகிறது.

அர்ஜுனன்:— கிருஷ்ணா, ஒருவனுக்கு ச்ரத்தை இருந்தும் நியமமில்லாததால் அவன் மனம் யோகத்தில் சலித்தால், யோக சித்தி ப்ராபிக்கா (அடையா) மல் அவன் என்ன கதி அடைவான்? மகாபாகோ, பிரம்ம மார்க்கத்தில் மயங்கி நிலைதவறி கர்மம் ஞானம் இரண்டுமின்றி உபயப்ரஷ்டனாய்ச் சிதறின மேகம்போல் நசிக்காதிருப்பானா? கிருஷ்ணா, இந்த

என் சந்தேகத்தைச் சேஷமின்றிச் சேதிக்க நீயே அர்கன். இந்த சம்சயத்தைச் சேதிக்கக்கூடியவன் உன்னைத்தவிர வேறுயாரையும் காணமுடியாது.

ஸ்ரீ பகவான்:— பார்த்தா, அவனுக்கு இகத்திலாவது பரத்திலாவது நாசம்கிடையாது. அப்பனே, கல்யாண (சுப) காரியம் செய்பவன் எவனும் துர்கதி அடையமாட்டான். யோகப்ரஷ்டன் (யோகத்தில் நிலை தவறினவன்) புண்யகர்மம் செய்தவர்க்குரிய லோகங்களை அடைந்து, அங்கு சாச்வதம் போல் வசித்து, பிறகு சுசிகரரான ஸ்ரீமான்கள் வீட்டில் பிறக்கிறான். அல்லது, மேதாவிகளான யோகிகள் வீட்டில் தோன்றுகிறான். இம்மாதிரி ஜன்மம் அடைவது லோகத்தில் துர்லப (அரிது) தரமே, குருநந்தன, அங்கே அவனுக்கு பூர்வ (பழைய) தேகத்துக்குரிய புத்தி சம்யோகம் லபிக்கிறது, அதிலிருந்து சம்சித்திபெற அவன் மறுபடியும் முயல்கிறான். தன் வசமில்லாமல் பூர்வ அப்யாசத்தினாலேயே அவன் செலுத்தப்படுகிறான். யோகத்தை அறியவிரும்புகிறவனும் சப்தப்ரம்மத்தை அதிக்ரமிக்கிறான் (அதிகரிக்கிறான்). ப்ரயத்தனத்தோடு அப்பியாசம் செய்யும் அந்த யோகி தன் மாசு எல்லாம் பரிசுத்தம் செய்யப்பட்டு அநேக ஜன்ம ஸம்சித்தியிலிருந்து பரமகதிக்குச்செல்கிறான்.

யோகி தபஸ்வியைக்காட்டிலும் அதிகமாகவும், ஞானியைக்காட்டிலும் அதிகமாகவும் எண்ணப்படுகிறான். அர்ஜுன, யோகி கர்மம் அநுஷ்டிப்பவரைக்காட்டிலுங்கூட அதிகம், ஆகையால் நீ யோகியாய் இரு. என்னிடத்தில் செலுத்திய அந்தராத்மாவோடும் ச்ரத்தையோடும் எவன் என்னை டஜிக்கிறானோ, அவன் சர்வயோகிகளிலும் யுக்ததமன் என்பது என்மதம்.



# இரண்டாம் பாகம் அத்தியாயம் 7-12.



## அத்யாயம் 7. விஞ்ஞான யோகம்.

ஸ்ரீ பகவான் :— பார்த்தா, என்னில் ஆஸக்த (ப்ரியமும் நம்பிக்கையுமுள்ள) மனசுடன் என்னையே ஆச்ரயித்து யோகம் புரிந்துகொண்டு சம்சயமில்லாமலும் சம்பூர்ணமாயும் என்னை எப்படி அறிவாயோ அதைக்கேள். விஞ்ஞான (ஸ்வாநுபவ—practical application) த்தோடு கூடிய அந்த ஞானத்தையும் நான் உனக்குச் சேஷமின்றிச் சொல்வேன். அதை அறிந்தபிறகு நீ அறியவேண்டியது மிச்சம் வேறொன்றுமில்லை. ஆயிரம் மனிதரில் ஒருவனே சித்திபெற முயல்கிறான். முயற்சித்துச் சித்திபெற்றவரில் எவனோ ஒருவனே என் தத்வத்தை யறிகிறான்.

பூமி, ஜலம், நெருப்பு, வாயு, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் என எட்டுவிதமாக என் ப்ரக்ருதி பிரிந்திருக்கிறது. இது தாழ்ந்த ப்ரக்ருதி. மகாபாகோ, இதற்கு அன்னியமும், ஜீவஸ்வரூபமானதும், இந்த ஜகத்தைத் தாங்குவதும், பரமுமான ப்ரக்ருதியையும் தெரிந்துகொள். அது தான் சர்வ பூதங்களுக்கும் யோனி (கரு) என்றுணர். தனஞ்ஜயா, நான் பரிபூர்ணன், ஜகத்தின் விஸ்தரிப்பும் (Creation) ப்ரளயமும் (Deluge). என்னைக் காட்டிலும் பரதரமானது (மேலானது) வேறெதுவுமில்லை. நூலில் மணிவரிசைகள் கோக்கப்பட்டிருப்பதுபோல் இந்தப் பிரபஞ்சமெல்லாம் என்னில் கோக்கப்பட்டிருக்கின்றன.

கௌந்தேயா, நான் ஜலத்தில் ரஸம் (சுவை), சந்திர சூரியர்களின் ப்ரபை (சோபை), சர்வ வேதங்களின் ப்ரணவம், ஆகாயத்தில் சப்தம், மனிதரின் பௌருஷம், பூமியின் (புண்ய) சுகந்தம், அக்னியின் தேஜஸ் (நெருப்பின் ஒளி), சர்வ பூதங்களின் ஜீவன், தபஸ்விகளின் தவம் நான். பார்த்தா, சர்வ பூதங்களுக்கும் நான் சாச்வதமான பீஜம் (விதை) என்று தெரிந்துகொள். நான் புத்திமான்களின் புத்தி, நான் தேஜஸ்விகளின் தேஜஸ் (ஒளி பொருந்தியவரின் ஒளி.) நான் பலவான்களின், காமமும் ராகமும் (பற்றும்) நீங்கின பலம். பரதரிஷப, நான் பூதங்களின் தரும விருத்தமில்லாத காமம். ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்னும் குணபாவங்கள் என்னிடமிருந்து உண்டாகின்றன. நான் அவைகளில் இல்லை. அவை என்னில் இருக்கின்றன. ' மேற்சொன்ன முக்குணமய பாவங்களால் இந்த சர்வ ஜகத்தும் மோகித்திருக்கிறது. அவற்றிற்குப்பரமானவனும் அழிவற்றவனுமான என்னை இந்த ஜகம் அறியாது. குணமயமான இந்த என்மாயை தெய்வத்தன்மையது. இதைக்கடத்தலரிது. என்னையார் சரணம் அடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைக்கடக்கிறார்கள். துஷ்க்ருத்யம் (கெட்ட காரியம்) செய்யும் மூடர் என்னைச்சரணம் அடைகிறதில்லை. நர அதமர்களான அவர்கள் (Worst among men) மாயையால் அபகரிக்கப்பட்ட ஞானத்துடன் அசுரபாவங்களையே (Demoniac natures) ஆச்ரயிக்கிறார்கள். (follow).

அர்ஜுன, சுக்ருதம் (நல்ல காரியம்) செய்யும் ஜனங்களில் என்னைப் பஜிப்பவர் நான்குவிதம். பரதரிஷப, அவர்கள் :—

1. ஆர்த்தன்—கஷ்டதசையிலிருந்து என்னை த்யானிப்பவன்
2. ஜிஞ்ஞாஸு—ஞானம் அடைய விரும்புவோன் ;

3. அர்த்தார்த்தி—ஒரு ப்ரயோஜனத்தைக் கோருபவன்;
4. ஞானி.

இவர்கள் நால்வரில் ஞானி நித்யயுக்தன், ஏகபக்தியுடையவன், சிரேஷ்டன். நான் ஞானிக்கு அத்யர்த்த (அதிக) ப்ரியன். அவனும் எனக்கு ப்ரியன். இவர்கள் நால்வகையோரும் உதாரர்கள் (கொடையாளிகள்). ஞானியோ நானே என்பது என்மதம் (அபிப்ராயம்). அவன் யுக்தாத்மாவாய் என்னையே உத்தமகதியாக ஊன்றி எண்ணி அந்த பாவத்திலேயே நிலைபெற்றிருக்கிறான். வெகு ஜன்மங்கள் அந்தத்தில் (முடிவில்), ஞானவான் "சர்வம் வாசுதேவன்" என்று என்னைச் சரணம் அடைகிறான். அப்படிப்பட்ட மகாத்மா கிடைப்பது துர்லபம் (அரிது).

அந்தந்த காமங்களால் பிடித்திழுக்கப்பட்ட ஞானமுடையவர்கள், தங்கள் ப்ரக்ருதியால் தூண்டப்பட்டு அந்தந்த நியமத்தில் ஊன்றி, அன்னியதேவதைகளைச் சரணம் அடைகிறார்கள். எவனெவன் எந்தெந்தரூபத்தில் பக்தி ச்ரத்தையுடன் என்னை அர்ச்சிக்க விரும்புகிறானோ, அவனவனுக்கு அந்தந்த ச்ரத்தையையே நான் உண்டாக்குகிறேன். அவன் அந்த ச்ரத்தையோடு கூடினவனாய் அதற்கேற்ற ஆராதனையைச் செய்ய விரும்புகிறான். அதிலிருந்து, என்னால் விதிக்கப்பட்ட இதங்களான காமங்களை அவன் பெறுகிறான். அல்பபுத்திகளாகிய அவர்களுக்குக்கிடைக்கும் பலம் முடிவு உடையதே. தேவர்களை ஆராதிப்பவர் தேவர்களைச்சேருகிறார்கள். என் பக்தன் என்னை அடைகிறான்.

நான் பிறக்கிறதற்குமுன் இல்லாமலிருந்து, பிறந்தபின் இப்போதே வ்யக்தம் (ப்ரபலம்) அடைந்திருப்பதாக புத்தியில்லாதவர்கள் நினைக்கிறார்கள். அழிவற்றதும் ஸர்வோத்

தமுமான என் பரமபாவத்தை அவர்கள் அறியார். யோக மாயையால் சூழப்பட்டிருக்கும் நான் எல்லார்க்குமே ப்ரகாசிக்கேன். நான் பிறப்பற்றவனென்றும் அழிவற்றவனென்றும் இம்மூட உலகம் அறியாது. அர்ஜுன, இறந்தகால பூதங்களையும், நிகழ்கால பூதங்களையும், எதிர்கால பூதங்களையும் நான் அறிவேன். என்னையாரும் அறியார். பாரதா! பரந்தபா! ச்ருஷ்டியிலுள்ள சர்வபூதங்களும் இச்சை த்வேஷங்களால் உண்டாகும் த்வந்த்வங்களால் மோஹிக்கப்பட்டுச் செல்கின்றன. புண்யகர்மம் செய்பவரான எந்த ஜனங்களுடைய பாபம் முடிவடைந்து விட்டதோ, அவர்கள் த்வந்த்வமோகத்திலிருந்து விடுபட்டு த்ருடமான வ்ரதத்தோடு என்னையே பஜிக்கிறார்கள். என்னை ஆச்ரயித்து ஜரா (கிழத்தனம்) மரணத்திலிருந்து விடுபட முயற்சிப்பவர் அகில (சமஸ்த) கர்மத்தையும், பூர்ண அத்யாத்மத்தையும் ப்ரம்மத்தையும் அறிவார். எவர் என்னை அதிபூதம் அதிதைவம் அதியஞ்ஞம் இவைகளுக்கு ஆதாரமாக அறிகிறாரோ, அவர் ப்ரயாண (மரண) காலத்திலும் யுக்தமனமுடையவராய் என்னை அறிகிறார்.

---

## அத்யாயம் 8. அக்ஷர பரப்ரம்மயோகம்.

அர்ஜுனன்:— அந்த ப்ரம்மம் என்பது எது? அத்யாத்மம் என்றால் என்ன? கர்மமாவது எது? புருஷோத்தமா! அதிபூதம் என்று சொல்லப்படுவது எது? அதிதைவம் எனப்படுவது எது? மதுஸூதனா! அதியஞ்ஞம் என்பது எப்பேர்ப்பட்டது? அது இந்த தேகத்தில் எது? நியதாத்மாக்களால் (நியமமுடையவர்களால்) ப்ரயாணகாலத்தில் (இறக்கும்போது) நீ எப்படி அறியப்படுகிறாய்?

ஸ்ரீபகவான்:— அழிவற்ற பரம்பொருள் ப்ரம்மம். மனிதசரீரத்திலுள்ள ஆத்மஸ்வபாவம் "அத்யாத்மம்" என்னப்படுகிறது. பூதபாவங்களை உத்பவிக்கச்செய்யும் விஸர்க்கம் (ஜீவன்களை பிறப்பித்தல்) கர்மம் எனப்படுகிறது. அழியும் பாவமுடையவைகள் அதிபூதம். புருஷன் அதிதைவம். தேகந்தரித்தவரில் உத்தமனே! இந்தத் தேகங்களில் அந்தர்யாமியாயிருக்கும் நானே அதியஞ்ஞன். அந்தியகாலத்தில் எவன் என்னையே ஸ்மரித்து (நினைத்து)க்கொண்டு உடலை விட்டுப்போகிறானோ, அவன் என் பாவத்தில் சேர்கிறான் (அம்சமாகிறான்), சம்சயமில்லை. கௌந்தேயா, ஒருவன் தன் அந்தியகாலத்தில் எந்தெந்த பாவத்தை ஸ்மரித்துக்கொண்டு தேகத்தை விடுகிறானோ, அவன் அந்தந்த பாவத்தை (அம்சத்தை)ப் பாவித்தவனாய் (நினைத்தவனாய்) அதையே அடைகிறான். ஆகையால் சர்வகாலமும் என்னையே ஸ்மரித்துக்கொண்டு நீ யுத்தம் செய். எனக்கு அர்ப்பிக்கப்பட்ட மனசையும் புத்தியையும் உடையவன் என்னையே அடைவான். சந்தேகமில்லை. பார்த்தா! வேறுவிஷயத்தில் செல்லாத அப்பியாச யோகயுக்த மனசால், திவ்யமான பரம புருஷனைச் சிந்திக்கிறவன் அவனையே அடைகிறான். திவ்விய

மான பரமபுருஷன் கவி (சர்வஞ்ஞன்), புராணன் (அநாதி காலமாயிருப்பவன்), ஆள்வோன் (Ruler), அணுவிற்கும் அணுவானவன், சர்வத்தையும் தாங்குபவன், அசிந்தியரூபன் (நினைக்கமுடியாத ரூபமுள்ளவன்), இருட்டைக்கடந்த ஆதித்யவர்ணன். (சூரியனைப்போல் ப்ரகாசிப்பவன்.) எவன் இப்படி தன் ப்ரயாண (மரண) காலத்தில் யோகபலத்தால் புருவங்களின் மத்தியில் ப்ராணனைச்சேர்த்து நிறுத்தி, சலனமில்லாத மனதோடும் புத்தியோடும் ஸ்மரிக்கிறானோ (நினைக்கிறானோ) அவன் அப்புருஷனையே அடைகிறான்.

வேதத்தையறிந்தவர்கள் எதை "அக்ஷரம்" என்கிறார்களோ, ராகம் நீங்கின எதிகள் எதில் ப்ரவேசிக்கிறார்களோ, எதை இச்சித்து அவர்கள் ப்ரம்மசர்யம் அநுஷ்டிக்கிறார்களோ, அந்த பதத்தை (நிலையை) நான் உனக்குச் சுருக்கமாய் (சங்கிரகமாய்)ச் சொல்லுகிறேன். மனதை இந்திரிய த்வாரங்கள் வழியாய்ச் செல்லவிடாமல் தடுத்து, அதை ஹ்ருதயத்தில் இருக்கும் என்னிடத்தில் நிறுத்தி, ப்ராணனை சிரஸில் சேர்த்து, யோகதாரணத்தில் நிலை நின்று, "ஓம்" என்னும் ஏகாக்ஷர ப்ரம்மத்தை உச்சரித்துக்கொண்டு, என்னையே ஸ்மரித்தவனாய், யார் தன் தேகத்தைவிட்டுப் பயணப்படுகிறானோ, அவன் பரமகதி அடைகிறான். வேறுமனமில்லாமல் எவன் இடைவிடாது நித்யம் என்னையே ஸ்மரிக்கிறானோ, நித்ய யுக்தனான அந்த யோகிக்கு நான் சுலபன். சித்தி பெற்று பரத்தை யடைந்த மகாத்மாக்கள் என்னையடைந்த பிறகு, சாச்வதமில்லாததும் துக்காலயமுமான புனர் ஜன்மத்தை யடையமாட்டார்கள். ப்ரம்மலோகம் வரையில் எந்த லோகம் சென்றாலும் ஒருவனுக்குப் புனர் ஜன்மம் (மறுபிறப்பு) உண்டு. கௌந்தேயா! என்னை யடைந்தவனுக்குத் தான் புனர் ஜன்மமில்லை.

ப்ரம்மாவின் பகல் ஸகஸ்ர (ஆயிர) யுக பர்யந்தம் என்றும், ப்ரம்மாவின் இரவு ஆயிரயுக அந்தம் என்றும் அறிபவர்களே பகல் இரவு தெரிந்த ஜனங்கள். பிரம்மாவின் பகல் ஆரம்பிக்கையில் வ்யக்தமான (வெளிப்படையான) ப்ரபஞ்ச ரூபங்கள் அவ்யக்தத்திலிருந்து வெளிக்கிளம்புகின்றன. பிரம்மாவின் ராத்திரி ஆரம்பிக்கையில் அவைகள் அவ்யக்தம் என்னப்பட்ட "அதில்" லயம் அடைகின்றன. (மறைகின்றன). இப்படி பூதசமூகம் தோன்றித்தோன்றி தம் வசமில்லாமலே, ராத்திரி ஆரம்பத்தில் மறைகிறது, பகல் ஆரம்பத்தில் தோன்றுகிறது. அந்த அவ்யக்தத்தைவிட பரமும் (மேலானதும்), ஸநாதனமுமான (நிரந்தரமுமான) வேறொரு அவ்யக்தம் இருக்கிறது. சர்வ பூதங்களும் நசிக்கையில் அது நசிக்கிறதில்லை. அதுதான் "அவ்யக்தம்" "அக்ஷரம்" என்னப்படுகிறது. அதைப் "பரமகதி" என்றும் சொல்கிறார்கள். அதையடைந்தவர் திரும்பார். அது என் பரமஸ்தானம்.

எவனில் பூதங்கள் நிலைபெற்றிருக்கின்றனவோ, எவனால் இவையெல்லாம் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றனவோ, அப்பரம புருஷனை அனன்ய (வேறிடம்செல்லாத) பக்தியால் அடையலாம். பரதரிஷப, யோகிகள் எந்தமார்க்கத்தில் (காலத்தில்) ப்ரயாணப்பட்டு (ப்ராணனைவிட்டு), புனர் ஜன்மத்துக்குத் திரும்புவார்களோ, எந்த மார்க்கத்தில் (காலத்தில்) ப்ரயாணப்பட்டு அப்படித் திரும்பார்களோ, அவர்கள் போகும் அந்த மார்க்கங்களைச் சொல்லுகிறேன், கேள். அக்னி, ஜோதி, பகல், சுக்கிலபக்ஷம், உத்தராயணம் இவைகளுக்குரிய அபிமானி தேவதைகளின் உலகங்கள் வழியாய்ப் போகும் பிரமத்தையறிந்த ஜனங்கள் பிரமத்தையே அடைகிறார்கள். (இது அர்ச்சிராதிகதி). புகை, ராத்திரி, கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம் இவைகளுக்குரிய அபிமானி தேவதைகளின் உலகங்கள்

வழியாய்ப் போகும் யோகி சந்திரஜோதி விளங்கும் உலகை யடைந்து புனர் ஜன்மத்துக்குத் திரும்புகிறான். (இது தூமாதி மார்க்கம்.) சுக்கிலகதி, கிருஷ்ணகதி என இவ்விரு கதிகளும் ஜனங்களுக்கு சாச்வதமானவை என்று கருதப்பட்டிருக்கின்றன. ஒரு வழியாய்ப் போகிறவன் சம்சாரத்தில் திரும்புகிறதில்லை. மற்றொரு வழியால் போகிறவன் சம்சார மார்க்கத்தில் திரும்புகிறான். பார்த்தா! இந்த இரண்டு மார்க்கங்களையும் அறிந்த யோகி எவனும் மயங்கமாட்டான். ஆகையால் அர்ஜுனா, நீ சர்வகாலமும் யோக யுக்தனாய் இரு. வேதம் ஓதலிலும், யஞ்ஞம் செய்வதிலும், தவத்திலும், தானத்திலும் என்ன புண்யபலம் ப்ரதிஷ்டமோ, அதை யெல்லாம், இதை யறிந்த யோகி அதிக்ரமித்து ஆத்யமாகிய (மூலமாகிய) பரம நிலையை அடைகிறான்.

---

## அத்யாயம் 9. ராஜவித்யா ராஜ குஹ்ய யோகம்.

ஸ்ரீபகவான்:— அசூயை இல்லாத உனக்கு குஹ்யதமமான (பரம ரகசியமான) இதைச் சொல்லுகிறேன். விஞ்ஞானத்தோடு (practical application) கூடிய இந்த ஞானத்தை அறிந்து நீ அசுபத்திலிருந்து விடுபடுவாய். இது ராஜவித்தை, ராஜரகசியம் பவித்ரமானது. உத்தமமானது. ப்ரத்தியக்ஷமாய் (நேரில்) அநுபவத்தில் அறியக்கூடியது. தர்மத்தை ஒட்டினது. அப்பியாசத்திற்கும் வெகு சுககரமானது. அழிவற்றது. பரந்தபா! இந்தத் தர்மத்தில் சிரத்தை இல்லாத புருஷர்கள் என்னை யடையாமல் மிருத்யுவாகிய சம்சாரவழியில் திரும்புகிறார்கள்.

இந்த சர்வ ஜகத்தும் (உலகும்) அவ்யக்த மூர்த்தியாகிய என்னால் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது. சர்வ பூதங்களும் என்னில் நிலைபெற்றிருக்கின்றன. நான் அவற்றில் நிலைபெறவில்லை. இன்னொருவிதத்தில் பார்த்தால், பூதங்கள் என்னில் நிலைத்தவையுமல்ல. என் ஈச்வரயோகத்தை (Overlordship)ப் பார். பூதங்களுக்கு ஆதாரமான நான் அப் பூதங்களில் நிலைபெறவில்லை. என் ஆத்மாவிலிருந்து பூதபாவங்கள் (ஜீவராசிகள்) உண்டாகின்றன. மகாவாயு (காற்று) எப்படி எங்கும் போய்க்கொண்டிருப்பினும் ஆகாயத்தில் நிலைபெற்றிருக்கிறதோ, அப்படி சர்வ பூதங்களும் என்னில் நிலைபெற்றிருக்கின்றன என்றறி. கௌந்தேயா, சர்வ பூதங்களும் கல்பக்ஷயத்தில் (பிரம்மாவின் முடிவு காலத்தில்) என் ப்ரக்ருதியை (இயற்கையை) யடைகின்றன. மறுபடியும் கல்ப ஆதியில் நான் அவைகளை சிருஷ்டிக்கிறேன் தம்வசமில்லாமல் என் ப்ரக்ருதிக்கு வசப்பட்டிருக்கும் இப்பூத சமூகம் முழுதையும் என் ப்ரக்ருதியையே ஆதாரமாகக்கொண்டு திரும்பத் திரும்ப நான் சிருஷ்டிக்கிறேன். அக்கர்மங்களில் நான் உதாஸீனன்போல் ஸங்கம் அற்றிருத்தலால், அக்கர்மங்

கள் என்னைப் பந்திக்கிறதில்லை (கட்டுப்படுத்துகிறதில்லை). நான் அத்தியக்ஷனாய் (President) இருக்க, ப்ரக்ருதி சராசரங்களை (அசைவன அசையாதவைகளை) சிருஷ்டிக்கிறது. கௌந்தேயா, இக்காரணத்தால் ஜகம் (உலகு) பரிவர்த்திக்கிறது (நிகழ்கிறது). பூதங்களுக்கெல்லாம் மகேச்வரனை என் பரம்பாவத்தை யறியாத மூடர்கள் மனித உருவந்தரித்த என்னை அவமதிக்கிறார்கள். அவர்கள் மோகத்தன்மையுள்ள ராக்ஷஸ அசுர ஸ்வபாவங்களை அநுசரித்தவர்கள். அவர்கள் மோகமான ஆசையையும், மோகமான கர்மங்களையும், மோகமான ஞானத்தையும் உடையவர்கள்; அசேதனர்கள் (சித்தத்தை யிழந்தவர்கள்). ஸததம் (இடைவிடாது) கீர்த்தனைகளால் என்னைப்பாடிக்கொண்டு முயற்சியோடு கூடியிருக்கும் த்ருடவ்ரதர்கள் (உறுதியான விரதமுடையவர்), நித்ய யுக்தர்களாய் என்னை நமஸ்கரித்து பக்தியுடன் உபாசிக்கிறார்கள். ஞான யஞ்ஞத்தால் ஆராதிக்கும் இன்னும் சிலர், வெவ்வேறான பல பொருள்களிலிருக்கும் விச்வதோமுகனை (ஜகத் ஸ்வரூபியான) என்னை ஒருவனாக அறிந்து உபாசிக்கிறார்கள்.

நான் மகாயஞ்ஞம், நான் யஞ்ஞம், நானே "பித்ருக்களுக்குக்கொடுக்கும்படியான திரவ்யம்", நானே ஔஷதம் ("தேவர்களுக்குக் கொடுக்கும்படியான திரவ்யம்"), நானே மந்திரம், நானே நெய், நானே அக்கினி. நானே ஓமம், இந்த ஜகத்துக்கு நான் பிதா, மாதா, தாதா (போஷகன்), பாட்டன். நான் வேதத்தால் அறியத்தகக பவித்ரமான (பாவனமான) வஸ்து. ஓம்காரம், ருக் ஸாம யஜுர்வேதங்கள். பார்த்தா, நான் இந்த ஜகத்துக்குக் கதி, ப்ரபு, சாக்ஷி நிவாஸம் (வாசஸ்தலம்), சரணம், உற்பத்தி ப்ரளயஸ்தானம் (உண்டாகுமிடம் மறையுமிடம்), பொக்கிஷம் (Treasure), அழிவற்ற பீஜம். (Indestructible Seed). அர்ஜுனா, நான் தாபத்தை (சூட்டை) க்கொடுக்கிறேன். நான் மழையைக் கட்டவும் பெய்யவும்

செய்கிறேன். நானே அம்ருதமும் ம்ருத்யுவும் (Immortality and Death), ஸத்தும் அஸத்துமாய் (Existence and non-existence) இருக்கிறேன்.

மூன்று வேதங்களை யநுசரித்தவர்கள் (வழிபடுபவர்) யஞ்ஞங்களால் எனக்கு இஷ்டத்தை யுண்டாக்கி ஸோமபானம் செய்து, தங்கள் பாபம் நீங்கினவராய், ஸ்வர்க்கத்தைப் ப்ரார்த்திக்கிறார்கள். அவர்கள் தாங்கள் செய்த புண்யத்தால் ஸுரேந்திர (தேவேந்திர) லோகத்தையடைந்து, அந்தஸ்வர்க்கத்தில் திவ்ய தேவபோகங்களை (இன்பங்களை) அநுபவிக்கிறார்கள். விசாலமான ஸ்வர்க்கத்தில் அவர்கள் அவைகளை அநுபவித்து, தங்கள் புண்யம் க்ஷீணித்தவுடன் (குறைந்த உடன்), மறுபடியும் மனிதலோகத்தில் ப்ரவேசிக்கிறார்கள். இப்படி மூன்று வேதங்களை அநுசரிக்கும் காமகாமர்கள் (விருப்பங்களை விரும்புபவர்கள்) போவதும் வருவதுமாய் இருக்கிறார்கள். எந்தஜனங்கள் அனன்ய (வேறிடத்தில் செல்லாத) சிந்தையோடு என்னையே உபாஸிக்கிறார்களோ நித்தியயுக்தர்களான அவர்களுடைய யோக க்ஷேமத்தை நான் வகிக்கிறேன். கௌந்தேயா, அன்னிய தேவதா பக்தர்கள் (இதர தேவதைகளின்மேல் பக்திபாராட்டுபவர்) யார் சிரத்தையோடு அன்னிய தேவதைகளைப் பஜிக்கிறார்களோ அவர்களும் விதிபூர்வகமில்லாமல் (விதிக்குமாறாக) என்னையே பஜிக்கிறார்கள். சர்வ யஞ்ஞங்களுக்கும் நான் போக்தாவும் ப்ரபுவுமாய் (Enjoyer and Lord) இருக்கிறேன். அவர்கள் என் தத்வத்தை யறியாதவர்களாதலால் சம்சாரத்தில் விழுகிறார்கள். தேவர்களை உத்தேசித்து வ்ரதம் இருக்கிறவர்கள் தேவர்களைச் சேர்கிறார்கள். பித்ருக்களை உத்தேசித்து வ்ரதம் இருக்கிறவர்கள் பித்ருக்களைச் சேர்கிறார்கள். பூதங்களை (Elements) ஆராதிப்பவர் பூதங்களைச் சேர்கிறார்கள். என்னைப் பூஜிப்பவர் என்னையடைகிறார்கள்.

எவன் எனக்குப்பக்தியோடு பத்ரமோ (இலை), புஷ்பமோ (பூ), பழமோ, ஜலமோ ஸமர்ப்பிக்கிறானோ, முயற்சியுள்ள வனான அவனால் பக்தியுடன் கொடுக்கப்பட்ட அதை நான் திருப்தியுடன் ஏற்கிறேன். கௌந்தேயா, நீ எதைச்செய் தாலும், எதைப் புஜித்தாலும் (சாப்பிட்டாலும்), எந்த ஹோமம் செய்தாலும், எந்த தானம் செய்தாலும், எந்த தவம் செய் தாலும், அதை எல்லாம் எனக்கு அர்ப்பணம் செய். இப்படி எல்லாவற்றையும் எனக்கே அர்ப்பிக்கும் யோக யுக்தாத்மா சுப அசுபபலன்களைத் தரும் கர்ம பந்தங்களிலிருந்து விடு பட்டு முக்தனாய் என்னையடைவான். நான் சர்வபூதங்களுக் கும் சமமாய் இருப்பவன். எனக்குத் த்வேஷி (விரோதி) யுமில்லை, ப்ரியனு (இஷ்டனு) மில்லை. என்னை எவர்கள் பக்தியுடன் பஜிக்கிறார்களோ, அவர்கள் என்னில் இருக்கிறார் கள்; நானும் அவர்களில் இருக்கிறேன். துராசாரமுடையவ னானாலும், அனன்ய (வேறிடம் செல்லாத) பக்தியோடு என்னைப் பஜித்தால் அவன் ஸாது வென்றே எண்ணத்தக் கவன். அவன் சரியாக நிச்சயித்தானல்லவா! அவன் சீக்கி ரம் தர்மாத்மாவாய் சாச்வதமான சாந்தியை அடைகிறான். கௌந்தேயா, என்பக்தன் அழியமாட்டான் என்று நீ ப்ர திஞ்ஞை செய். பாபயோனியில் பிறந்தவர் (நீசர்), பெண்கள், வைச்யர், சூத்திரர் யாரானாலும் என்னை விசேஷமாக ஆச்ர யித்து பரமகதியை அடைகிறார்கள். புண்ய ஜன்மமுள்ள ப்ராம்மணரையும், பக்தியுள்ள ராஜரிஷிகளையும் பற்றிச் சொல்லவேண்டுமா? அநித்யமும் சுகமற்றதுமான இந்த லோகத்தை யடைந்த நீ என்னையே பஜி. என் மனத்தனாய் இரு. என் பக்தனாய் இரு. என்னை ஆராதி. என்னை நமஸ்கரி. என்னையே பரமாகக் கொண்டு ஆத்மயுக்தனாய் என்னை யடைவாய்.

---

## அத்யாயம் 10. விபூதியோகம்-ஈச்வரத்வம்.

ஸ்ரீபகவான் :— மகாபாகோ, மறுபடியும் என் பரம வசனத்தைக்கேள். என் பிரியனுன உனக்கு உன் இதத்தைக் கோரி நான் சொல்லுகிறேன். ஸுர (தேவ) கணங் (கூட்டங்) களாவது, மகரிஷிகளாவது என் ப்ரபாவத்தை யறியார். சர்வ விதத்தாலும், தேவர்களுக்கும் மஹரிஷிகளுக்குங்கூட நான் ஆதியானவன். மிருத்யுவுக்கு (சாவுக்கு) உள்பட்ட மனிதர் களில், மோகமற்ற எவன் என்னை அஜனுகவும் (பிறப்பற்ற வனுகவும்), அனுதியாகவும் (ஆரம்பமில்லாதவனுகவும்), லோக மகேச்வரனுகவும் அறிகிருனே, அவன் சர்வ பாபத்தினின் றும் விடுதலை யடைகிருன்.

பூதங்களுக்குக் கீழ்குறிக்கப்படும் வெவ்வேறு பாவங்கள் என்னுலேயே உண்டாகின்றன :— புத்தி, ஞானம், மோக மின்மை, க்ஷமை (மன்னித்தல்), சத்யம், சமம் (control of the emotions - உள் இந்திரிய நிக்ரகம்), தமம் (control of the senses - வெளி இந்திரிய நிக்ரகம்), சுகம் துக்கம், உண் டாதல் மறைதல், பயம் அபயம் (பயமின்மை), அகிம்சை, சமத்வம், சந்துஷ்டி, தவம், தானம், யசஸ் (கீர்த்தி), அயசஸ் (அபகீர்த்தி), பூர்வம், சப்த (ஏழு) ரிஷிகளும், நான்கு மனுக் களும் என் பாவத்தை யனுசரித்து மானஸிகமாய் (மனசால்) ஜனித்தார்கள் (பிறந்தார்கள்). இந்தலோக ப்ராஜைகள் (ஜனங் கள்) அவர்களிலிருந்து உண்டானவர்கள். இந்த என் விபூதி (ஈச்வரத்வம்) யினுடையவும், யோகத்தினுடையவும் தத் வத்தை யறிபவன், அசைக்கமுடியாத யோகத்தில் நிலைக் கிருன். இதில் சம்சய (சந்தேக) மில்லை. நான் சர்வத்துக் கும் உற்பத்தி, சர்வமும் என்னிடமிருந்தே ப்ரவிருத்திக் கின்றன, என்று சிந்தித்து புத்திமான்கள் பாவத்துடன் (with feeling) என்னைப் பஜிக்கிருர்கள். அவர்கள் என்

னிடத்தில் தங்கள் சித்தத்தைச் செலுத்தினவர்களாய், என் மேல் ப்ராணராய், தங்களுக்குள் பரஸ்பரம் என்னைப் போதித்துக்கொண்டும், சொல்லிக்கொண்டும் நித்யம் சந்தோஷிக்கிறார்கள், சுகிக்கிறார்கள். புத்தியுக்தர்களாய் ப்ரீதி பூர்வகமாய் ஸததம் (இடைவிடாது) என்னைப்பஜிக்கும் அவர்களுக்கு, அவர்கள் என்னை எதனால் அடைவார்களோ, அந்த புத்தி யோகத்தை நான் கொடுக்கிறேன். அவர்களை அநுக்ரகிக்கும் (அவர்களுக்கு அருள் புரியும்) பொருட்டு நான் அவர்கள் ஆத்மபாவத்தில் நிலைத்து, அஞ்ஞானத்தால் பிறந்த அவர்களுடைய தமசை (இருளை) ஞானதீப ஒளியால் போக்கடிக்கிறேன்.

அர்ஜுனன்:— நீ பரப்ரம்மம், பரந்தாமன், பரம பவித்ரம், சாச்வதமான திவ்ய புருஷன், ஆதிதேவன், அஜன், விபு. சர்வரிஷிகளும், தேவரிஷி நாரதரும், அஸிதரும், தேவலரும், வியாசரும் உன்னைப் புகழ்கிறார்கள். நீயும் ஸ்வயமாகவே எனக்குச் சொல்லுகிறாய். கேசவா, நீ எனக்குச் சொன்னதெல்லாம் உண்மையென்றே நினைக்கிறேன். பகவானே, தேவர்களாவது, தானவர்களாவது உன் அவதார மகிமையை அறியார்கள். புருஷோத்தமா! பூதங்களுக்கு ஆதாரமானவனே! பூதேச! தேவ தேவ! ஜகத்பதே! உன் ஸ்வரூபத்தை நீயே ஸ்வயமாக உன் ஆத்மாவில் அறிகிறாய். இந்த லோகங்களை எந்த விபூதிகளால் (ஐச்வர்யங்களால்) நீ வ்யாபித்து நிற்கிறாயோ அந்த உன் திவ்ய ஆத்ம விபூதிகளை நீ எனக்குச் சேஷமின்றிச் சொல்ல உரியன். யோகி! நான் எப்படி உன்னை சதா சிந்தித்துக்கொண்டு அறிவேன்? பகவானே, எந்தெந்த பாவங்களில் நீ என்னால் சிந்திக்கத்தகும்? ஜனார்த்தனா, உன் யோகத்தையும், விபூதியையும் (Transcendence and Immanence,) மறுபடியும் விஸ்தாரமாகச் சொல். இந்த அம்ருதத்தைக் கேட்பதில் எனக்குத் திருப்தி உண்டாகவில்லை.

ஸ்ரீ பகவான்:— உனக்கு மங்களம். என் திவ்ய ஆத்ம விபூதிகளில் ப்ரதான (முக்ய) மானவைகளைச் சொல்லு கிறேன். என் விபூதி விஸ்தாரத்திற்கு எல்லை இல்லை. குடா கேசா! நான் சர்வஜீவர்கள் இதயத்திலும் (உள்ளத்திலும்) நிலைபெற்றிருக்கும் ஆத்மா. நானே பூதங்களின் ஆதியும் மத்யமும் அந்த்யமும் (ஜீவன்களின் முதலும் நடுவும் முடிவும்); த்வாதச (12) ஆதித்யர்களில் நான் விஷ்ணு, ஜோதிகளுள் (ஒளிபொருந்தியவைகளுள்) நான் மிக்க பிரகாசமுள்ள சூரி யன், சப்த (ஏழு) வாயுக்களில் நான் மரீசி; கிரகங்களில் (நக்ஷத்ரங்கள் என்பது மூலம்) (among planets) நான் சந் திரன்; வேதங்களில் நான் ஸாமவேதம்; தேவர்களில் நான் இந்திரன்; இந்திரியங்களில் நான் மனசு; நான் பூதங்களின் சைதன்யம் (consciousness — உணர்ச்சி); ஏகாதச (பதி னொரு) ருத்ரர்களில் நான் சங்கரன், யக்ஷராக்ஷஸர்களில் குபேரன்; அஷ்ட (எட்டு) வசுக்களில் நான் பாவகன், சிகரங் களுள்ள மலைகளில் நான் மேரு (மலை), பார்த்தா, நான் ப்ரோ கிதர்களில் முக்யனான ப்ரகஸ்பதி என்றறி. சேனாபதிகளில் நான் ஸ்கந்தன்; சரசுக்களில் (நீர்நிலைகளில்) நான் ஸாகரம் (சமுத்திரம்); மகரிஷிகளில் நான் பிருகு; வசனத்தில நான் ப்ரணவம் ("ஓம்"); யஞ்ஞங்களில் நான் ஜபயஞ்ஞம், ஸ்தாவ ரங்களில் (அசையாதவற்றில்) நான் ஹிமாலயம் (இமயமலை); சர்வ விருக்ஷங்களில் அச்வத்தம் (அரசமரம்), தேவரிஷி களில் நாரதன், கந்தர்வர்களில் சித்ரரதன், சித்தர்களில் கபில முனி. குதிரைகளுள், திருப்பாற்கடலைக்கடைகையில் அம் ருதத்தோடு பிறந்த உச்சைச்ரவம் நான் என்றறி; அஷ்ட (8) திக் கஜங்களான கஜேந்திரங்களில் நான் ஐராவதம், நரர்களில் நான் நராதிபன் (மனிதர்களுக்குத்தலைவன்). ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம், பசுக்களில் நான் காமதேனு, ப்ரஜைகள் (ஜனங்கள்) உற்பத்திக்குக் காரணமான மன்மதன் நான்.

(ஒருதலையுள்ள) சர்ப்பங்களில் நான் வாஸுகி; (பலதலையுள்ள) நாகங்களில் நான் ஆதிசேஷன். ஜலதேவதைகளில் நான் வருணன் (சமுத்திர ராஜா), பித்ருக்களில் நான் அர்யமன், சிக்ஷிப்பவரில் நான் யமன்; தைத்யர்களில் நான் ப்ரஹ்லாதன்; கணக்குவைப்பவரில் ("ஆக்ரமிப்பவரில்") நான் காலன்; மிருகங்களில் நான் மிருகேந்திரன் (சிங்கம்); பக்ஷிகளில் கருடன், பாவனம் செய்பவையில் நான் காற்று; சஸ்திரதாரிகளில் (ஆயுதம் பிடித்தவர்களில்) நான் ராமன்; மீன்களில் நான் மகரம், ப்ரவாகங்களில் (வெள்ளங்களில்) நான் கங்கை.

அர்ஜுன, ச்ருஷ்டிக்கப்படுபவைகளின் ஆதியும் அந்தமும் மத்யமும் (முதலும் முடிவும் நடுவும்) நானே. வித்தைகளில் நான் அத்யாத்ம வித்தை (பிரம்ம வித்தை—இந்த கீதை); வாதிப்பவரின் வாதம் (argument) நான். அக்ஷரங்களில் (எழுத்துக்களில்) நான் அகாரம்; ஸமாஸங்களில் த்வந்த்வ ஸமாஸம்; நானே அக்ஷயமான (குறையாத, அழியாத) காலம்; நானே உலகத்தைப் படைத்த விச்வதோமுகனை பிரம்மன்; நானே சர்வத்தையும் சங்கரிக்கும் மிருத்யு. நான் பிறப்பவைகளின் உற்பத்தி, மாதர்களின் கீர்த்தி, ஸ்ரீ (Prosperity), வாக்கு, ஞாபகம், புத்தி, திடம், க்ஷமை; ஸாமங்களில் நான் ப்ருஹத்ஸாமம்; 26 சந்தஸ்களில் (metres in poetry) நான் காயத்ரி சந்தஸ்; மாஸங்களில் நான் மார்கழி; ருதுக்களில் வசந்தருது.

நான் வஞ்சிப்பவரின் சூதாட்டம்; நான் தேஜஸ்விகளின் தேஜஸ்; நான் ஜயம், நான் முயற்சி, நான் ஸாத்விகருடைய சத்வகுணம். வ்ருஷ்ணிகளுள் நான் வாஸுதேவன், பாண்டவர்களில் தனஞ்ஜயன், முனிவர்களில் வ்யாசன், கவிகளில் சுக்ராச்சாரி. நான் ஆள்வோரிடத்துத் தண்டம், நான் ஜயம் கோருபவருடைய நீதி, ரகஸ்யங்களில் நான் மௌனம். நான் ஞானவான்களின் ஞானம்.

அர்ஜுன, சர்வ பூதங்களுக்கும் பீஜம் (விதை) எதுவோ அது நானே. சராசர பூதங்கள் எவை எவையுண்டோ அவையெல்லாம் என்னையன்றி வேறில்லை. பரந்தபா, என் திவ்ய விபூதிகளுக்கு முடிவில்லை. இந்த விஸ்தாரம் என் விபூதியில் ஒரு உத்தேசமாய் சொல்லப்பட்டது. விபூதியில் (ப்ரபஞ்ச சிருஷ்டியில்) எதெது சத்வமோ, ஸ்ரீகரமோ, ஊர்ஜிதமானதோ ("Mighty"), அதது என் தேஜஸின் ஓர் அம்சத்திலிருந்து சம்பவித்ததென்று தெரிந்துகொள். அர்ஜுன, இந்த வெகுவான விபூதி மகிமையை அறிந்து உனக்கு என்ன ப்ரயோஜனம்? இந்த ஜகம் முழுதையும் என் ஓர் அம்சத்தினால் தரித்திருக்கிறேன்.

---

## அத்யாயம் 11. விச்வரூபதரிசன யோகம்.

அர்ஜுனன் :— என்னை அநுக்ரகிப்பதற்காக (எனக்கு அருள் புரிந்து) சொல்லப்பட்ட பரம ரகஸ்யமும் ஆத்ம போதகமுமான (ஆத்மாவை அறிவிப்பதுமான) உன் வார்த்தைகளால் என் மோகம் போய்விட்டது. கமல பத்ராக்ஷா (தாமரை இதழ்போன்ற கண்களையுடையவனே), பூதங்களின் உற்பத்தி விநாசங்களும், குறைவற்ற உன் மகாத்மியமும் விஸ்தாரமாய் என்னால் கேட்கப்பட்டது. பரமேச்வரா! புருஷோத்தமா! நீ உன்னைப்பற்றிச் சொன்னபடியே உன் ஈச்வரரூபத்தைப் பார்க்க இச்சிக்கிறேன். ப்ரபு! யோகேச்வரா! நான் அதைப்பார்க்க முடியுமென்று நீ நினைத்தால், அழிவற்ற அந்த ஆத்மஸ்வரூபத்தை எனக்குக் காட்டு.

ஸ்ரீபகவான்:— பார்த்தா, என்ரூபத்தை நானு விதங்களாகவும், திவ்யமானவையாகவும், நானு வர்ணங்களுள்ள ஆக்ருதிகளாகவும் (உருவங்களாகவும் - shapes), நூறு நூருகவும், ஆயிரம் ஆயிரமாகவும் பார். பாரதா, ஆதித்யர்களையும், வஸுக்களையும், ருத்ரர்களையும், அச்வினிதேவர்களையும், மருத்துக்களையும் பார். நீ முன்பு பார்த்திராத பல ஆச்சர்யங்களையும் பார். குடாகேசா, சராசர ஜகம்முழுதும் நீ பார்க்க இச்சிக்கும் இன்னும் இதரமானவைகளும் இன்று இங்கு என் தேகத்தில் நிலைபெற்றிருப்பதைப்பார். உன் இந்த சாதாரணக்கண்களைக் கொண்டு நீ என்னைப்பார்க்க முடியாது. நான் உனக்கு திவ்ய சக்ஷுசை (கண்ணை) க் கொடுக்கிறேன். என் ஈச்வர மகிமையைப்பார்.

சஞ்ஜயன், (திருதராஷ்டிரனிடம்):— ராஜனே, மகாயோகேச்வரரான ஹரி (கிருஷ்ணன்) இதைச்சொல்லிவிட்டுப் பிறகு தன் ஈச்வரரூபத்தைப் பார்த்தனுக்குத் தரிசனம் செய்

வித்தார். அந்த தேவஸ்வரூபம், அநேக வாய்களும் கண்களும் அநேக அற்புதமான தரிசனங்களும் (தோற்றங்களும் - views) உடையதாயும், அநேக திவ்ய ஆபரணங்களையும், தூக்கிப் பிடிக்கப்பட்ட பல திவ்ய ஆயுதங்களையும், திவ்ய மாலைகளையும், ஆடைகளையும் தரித்ததாயும், திவ்ய கந்தம் (வாசனை) பூசப்பெற்றதாயும், சர்வ ஆச்சர்யமயமானதாயும், அநந்தமாயும் (அளவற்றதாயும்), எல்லாத்திக்குகளிலும் முகமுள்ளதாயும் இருந்தது. ஆகாயத்தில் ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியர்கள் உதித்தால் உண்டாகக்கூடிய அவ்வளவு ப்ரகாசம் அந்த மகாத்மாவின் தேஜசுக்கு ஸத்ருசம் (ஒத்தது) என்னலாம். அப்பொழுது பாண்டவன் (அர்ஜுனன்) தேவ தேவருடைய சரீரத்தில் ஒரு பாகத்தில், ஜகம் முழுதும் அநேகவித விபாகங்களோடு இருப்பதைப்பார்த்தான். பிறகு தனஞ்ஜயன் ஆச்சர்யத்தால் பரவசனாய் மயிர்சிலிர்த்து பகவானைத் தலையால் வணங்கி, கைகூப்பிக்கொண்டு சொன்னான்:-

அர்ஜுனன் :— உன் தேகத்தில் தேவர்களையும், சர்வ பூதவிசேஷங்களையும் (special varieties of Creation), கமலாஸனஸ்தனை (பிரம்மாவை)யும், ஈசனை (சிவனை)யும், சர்வ ரிஷிகளையும், திவ்ய சர்ப்பங்களையும் பார்க்கிறேன். விச்வேச்வரா! அநந்தரூபமாகிய உன் விச்வரூபத்தில் அநேக புஜங்களையும் (கைகளையும்), வயிறுகளையும், வாய்களையும் கண்களையும் பார்க்கிறேன். முடிவையாவது நடுவையாவது முதலையாவது நான் காணவில்லை. கிரீடம் கதை சக்கரம் தரித்தவனும், தேஜோராசி (ஒளித்திரள்) யாய் நாலா பக்கங்களிலும் ப்ரகாசித்துக்கொண்டிருப்பதால் பார்க்கமுடியாதவனும், அனலையும் சூரியனையும் போன்ற தேஜஸோடு ஜ்வலிப்பவனும், வாக்குக் கெட்டாதவனுமான உன்னை எல்லாத் திக்குகளிலும் பார்க்கிறேன். நீ அக்ஷரன்; அறியத்தக்க பரம்பொருள். இந்த

விச்வத்து (Universe) க்கு நீ பரம ஆதாரம், நீ குறைவற்ற வன், சாச்வதமான தர்மத்தைக் காப்பாற்றுபவன், சனாதன புருஷன் என்று நினைக்கிறேன். உன்னை, ஆதி மத்யம் அந்தம் இல்லாதவனாகவும், அநந்த வீர்யனாகவும், அநந்த பாகுவா (கணக்கில்லாத கைகளையுடையவனா)கவும், சசி சூர்ய நேத்ரன் (சந்திர சூர்யர்களைக்கண்களாக உடையவன்) ஆக வும், ஜ்வலிக்கின்ற நெருப்பை முகமாக உடையவனாகவும், உன் (ஸ்வய) தேஜஸினால் இந்த விச்வத்தை (universe) யே தபிக்கிறவனாகவும் பார்க்கிறேன். ஆகாசத்துக்கும் பூமிக்கும் இடைவெளியில் சர்வதிக்குகளிலும் நீ ஒருவனே வ்யாபித் திருக்கிறாய். அத்புதமான இந்த உன் உக்ர ரூபத்தைப் பார்த்து த்ரி (மூன்று) லோகமும் சோர்கின்றன.

இந்தத் தேவகணங்கள் உன்னில் நுழைகிறார்கள். சிலர் பீதி (பயம்) பிடித்து உன்னைக்கைகூப்பித் துதிக்கிறார்கள். மகரிஷிகணங்களும் சித்தர் கணங்களும் "ஸ்வஸ்தி" ("மங் களம் உண்டாகட்டும்" என்கிற பொருளுள்ள வாழ்த்துரை) வசனம் சொல்லி, புஷ்கலமான (நிறைந்த) ஸ்தோத்திரங் களால் உன்னைத்துதிக்கிறார்கள். ருத்ரர், ஆதித்யர், வஸுக் கள், ஸாத்யர், விச்வேதேவர், அச்வினிதேவர், மருத்துக்கள், பித்ருக்கள், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் கூட்டங்கள்,— எல்லாரும் உன்னை வியந்து நோக்குகிறார்கள். மகாபாகோ! பலவாய்களும், கண்களும், பலபுஜங்களும், தொடைகளும், பாதங்களும், பல வயிறுகளும், பயங்கரமான பல பற்களு முடைய உன் மகத்தான ரூபத்தைப்பார்த்து உலகங்கள் நடுங்குகின்றன. நானும் அப்படியே நடுங்குகிறேன். அநேக வர்ணங்களுடனும், திறந்தவாயுடனும், ஜ்வலிக்கும் விசால மான கண்களுடனும், ஆகாயத்தை யளாவி ஜ்வலித்துக்கொண் டிருக்கும் உன்னைப்பார்த்து என் அந்தராத்மா நடுங்குகிறது.

தைர்யமாவது மனஅமைதியாவது நான் காணவில்லை. தேவேசா! ஜகன்னிவாசா! பயங்கரமான (கோர) பற்களை யுடையவையும், ப்ரளயகாலாக்னியை யொத்தவையுமான உன் வாய்களைப்பார்த்து எனக்குத் திசைகளும் தெரியவில்லை, நான் அமைதியும்பெறவில்லை. ப்ரசன்னனுவாயாக (தணி.)

பயத்தை உண்டு பண்ணும் க்ரூரமான கோரப்பற்களை யுடைய உன் வாய்களில் பூபாலகர் (அரசர்) கூட்டங்களோடு பீஷ்மரும், த்ரோணரும், ஸூதபுத்ரனும் (கர்ணனும்), நம்மைச் சேர்ந்தவருள் முக்யமான யுத்த வீரர்களும் விரைந்து நுழை கிறார்கள். சிலர் அப்பற்களின் இடையில் அகப்பட்டுக் கொண்டு, அவர்கள் தலைகள் சூர்ணமாக்கப்பட்டுக் காண்கிறார் கள். எப்படி பல நதிகளின் வேகமான ஜலங்கள் சமுத்திரத்தை நோக்கி ஓடுகின்றனவோ, எப்படி எரியும் நெருப்பில் விட்டில் கள் வீழ்கின்றனவோ, அப்படி இந்நரலோக வீரர்கள், நசிக்க, ஜ்வலிக்கும் உன்வாய்களில் நுழைகிறார்கள். நான்கு பக்கங் களிலும் நக்கி உலகங்களனைத்தையும் நீ உன் ஜ்வலிக்கும் வாய் களால் விழுங்குகிறாய். ஓ விஷ்ணு! உன் உக்ரகிரணங்கள் அவற்றின் தேஜஸால் ஜகம் முழுதையும் நிரப்பித் தபிக்கின் றன. தேவவர! உனக்கு நமஸ்காரம். உக்ரரூபியான நீயார்? எனக்குச்சொல்; ப்ரசன்னனுவாயாக. ஆதிபுருஷனுகிய உன்னை யறிய விரும்புகிறேன். உன் ப்ரவிருத்தியையும் நான் அறிகிலேன்.

ஸ்ரீபகவான்:— லோகத்திற்கு க்ஷயத்தை (குறைவை, அழிவை) ச்செய்ய விருத்தி யடைந்திருக்கும் காலன் நான். லோகத்தை சங்கரிக்க இங்கே ப்ரவிருத்தித் திருக்கிறேன். இந்த சத்ரு சைன்யங்களி (opposing armies)ல் நின்றிருக் கும் யுத்த வீரர்கள் எல்லாரும், நீ இல்லா விட்டாலும், மிஞ் சிப் பிழைக்கமாட்டார்கள். ஆகையால் நீ எழுந்திரு. யுத்தம்

செய்து யசஸ் அடை. சத்ருக்களை ஜயித்து சம்ருத்தியுள்ள ராஜ்யத்தை அநுபவி. முன்னாலேயே இவர்கள் என்னால் கொல்லப்பட்டுவிட்டார்கள். இடக்கைவீர, நீ நிமித்தமாத் திரம் இரு. த்ரோணரும், பீஷ்மரும், ஜயத்ரதனும், கர்ண னும், இன்னும் வேறு யுத்தவீரர்களும் என்னால் கொல்லப் பட்டவர்களே. நீ அவர்களைக் கொல். துன்பப்படாதே. யுத் தம் செய். சத்ருக்களை நீ ரணத்தில் ஜயிப்பாய்.

சஞ்ஜயன்:— கேசவருடைய இந்த வசனத்தைக் கேட்டு கிரீடி (அர்ஜுனன்) நடுங்கிக்கொண்டு கிருஷ்ணனை அஞ்சலி செய்து நமஸ்கரித்து, பீதி பிடித்தவனாய் மறுபடியும் ப்ரண மம் பண்ணி (நமஸ்கரித்து) ச்சொன்னான்.

அர்ஜுனன்:— ரிஷீகேசா, ஜகம் உன்னைக் கீர்த்தனம் செய்வது யுக்தமே. அப்படிச்செய்து அது உற்சாகம் பெறு கிறது, உள்ளம் குளிர்கிறது. ராக்ஷசர்கள் பீதியால் திக்கு களில் ஓடுகிறார்கள். சித்தர் கணங்களெல்லாம் உன்னை விழுந்து நமஸ்கரிக்கிறார்கள். ஓமகாத்மா! அவர் உன்னை நமஸ் கரிக்காமல் எப்படி இருப்பார்! நீ ப்ரம்மாவுக்கும் பெரியவன், ஆதிகர்த்தா, அநந்தன், தேவேசன், ஜகன்னிவாஸன். நீ அக்ஷ ரம், ஸத், அஸத், எது பரமோ அது. நீ ஆதிதேவன், புராண புருஷன். இந்த விச்வத்துக்கே நீ பரம ஆச்ரயம். நீயே அறி பவனும் அறியத்தக்கவனுமாய் இருக்கிறாய். பரந்தாமா! அநந் தரூபா! இந்த விச்வம் (Universe) உன்னால் வ்யாபிக்கப்பட் டிருக்கிறது.

நீ வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், ப்ரஜாபதி (பிரம்மா), அவனுக்கும் தகப்பன். உனக்கு நமோ நம: (பல தரம் நமஸ்காரம்), ஆயிரம் தரம் திரும்பத்திரும்ப உனக்கு நமோநம: (நமஸ்காரம்), முன்னும் பின்னும் உன்னை நமஸ்

கரிக்கிறேன், அநந்தவீர்ய! அமித விக்ரம! சர்வத்தையும் நீ வ்யாபித்திருத்தலால் நீயே சர்வம் (எல்லாம்). ஓ அச்யுதா! அப்ரமேயா (அளவிட முடியாதவனே)! உன் மகிமையைத் தெரியாமல் உன்னை சாதாரண தோழன் என்று நினைத்து பரபரப்புடன், "ஓ கிருஷ்ணா, ஓ யாதவா, ஓ ஸகா" என்று அஜாக்ரதையாகவாவது ஸ்நேகத்தினாலாவது என்னென்ன சொன்னேனோ அதையும், விளையாட்டிலோ, படுக்கையிலோ, உட்கார்ந்திருக்கையிலோ, சாப்பிடுகையிலோ, தனியிலோ, சங்கத்திலோ நான் செய்த அவமதிப்புகளையும் க்ஷமி (மன்னி)க்கும்படி உன்னைப் ப்ரார்த்திக்கிறேன். சராசரங்களடங்கிய இந்த லோகத்துக்கு நீ பிதா. நீ பூஜ்யனும் (பூஜிக்கத் தக்கவனும்) பெரியோனான குருவுமாய் இருக்கிறாய். உனக்குச் சமமானவன் வேறு யாரும் இல்லை. அதிகமானவன் ஏது? மூன்று லோகங்களிலும் ஒப்பில்லாத ப்ரபாவம் உடையவனே! ஆகையால் என் உடம்பு பூமியில் படிய வணங்கி (நமஸ்கரித்து), பூஜ்யனும் ஈச்வரனுமான உன்னைப் பிரார்த்திக்கிறேன். தேவா, பிதா புத்ரனையும், நண்பன் நண்பனையும், பிரியன் பிரியையையும் பொறுப்பது போல், நீ என்னைப் பொறுத்தல் வேண்டும். இதற்குமுன் யாரும் பாராததை நான் பார்த்து ஆநந்திக்கிறேன். ஆனாலும் என் மனம் பயத்தால் வருந்துகிறது. தேவேச! ஜகன்னிவாஸா! உன் அந்த (ஸ்ரீகஜ) ரூபத்தையே காட்டி ப்ரசன்னனாகுக (அருள் புரி, தணி). ஸகஸ்ரபாகோ (ஆயிரம் கைகளை யுடையவனே)! விச்வமூர்த்தி! கிரீடமும் கதையும் அணிந்து கையில் சக்கரத்துடன் உன்னைப் பார்க்க விரும்புகிறேன். நான்கு புஜங்களோடு கூடின அந்த ரூபத்துடனேயே தோன்று.

ஸ்ரீ பகவான்:— தேஜோமயமும், அந்தமும் ஆதியும் இல்லாததும், விச்வரூபமும், பூர்வம் உன்னைத் தவிர வேறு யாரும் பார்க்காததுமான இந்தப் பரம ரூபம் என் யோகத்தி

னால், உன்னில் ப்ரசன்னனாய என்றால் உனக்குக் காட்டப்பட்டது. குருப்ரவீர, நரலோகத்தில், உன்னைத் தவிர வேறு யாராலும், வேதாத்யயனம், யஞ்ஞங்கள், தானங்கள், க்ரியைகள், உக்ரமான தவங்கள் இவைகளால், இந்த ரூபத்தில் நான் பார்க்க இயலாதவன். அப்படிப்பட்ட இந்த என் கோர ரூபத்தைப் பார்த்து நீ மனங்கலங்கி வருந்தாதே. பீதி நீங்கினவனாய், ப்ரீதியான மனசோடு என் சகஜரூபத்தை மறுபடியும் பார்.

சஞ்ஜயன்:— இவ்விதம் வாசுதேவர் அர்ஜுனனுக்குச் சொல்லி, மறுபடியும் தன் ஸ்வயரூபத்தைக் காட்டினார். அந்த மகாத்மா மறுபடியும் ஸௌம்யரூபம் புனைந்து, பீதியிலிருந்த அவனை (அர்ஜுனனை) ஆச்வாசப்படுத்தினார் (தேற்றினார்).

அர்ஜுனன்:— ஜனார்த்தனா, இந்த உன் ஸௌம்ய (சாந்த)மான மனுஷ்ய ரூபத்தைப் பார்த்து இப்பொழுது தான் நான் என் ஸ்வபாவத்தை யடைந்து என் மனசோடு கூடியவனானேன்.

ஸ்ரீபகவான்:— நீ பார்த்த இந்த என் ரூபம் பார்த்தல் அரிது. தேவர்கள் இந்த ரூபத்தைத் தரிசிக்க நித்யம் விரும்புகிறார்கள். வேதம் ஓதுதல், தவம், தானம், யஞ்ஞங்கள் இவைகளால் நீ பார்த்தமாதிரி என்னைப் பார்க்க முடியாது. பரந்தபா (சத்துருக்களை வாட்டுபவனே), அர்ஜுன, அனன்ய பக்தியால்தான் இவ்விதம் என் தத்வத்தை அறியவும், பார்க்கவும், அடையவும் முடியும். பாண்டவா, என் கர்மத்தைச் செய்பவன், என்னைப் பரமாகக் கொண்டவன், என் பக்தன், ஸங்கத்தை விட்டவன், சர்வ பூதங்களிடத்தும் வைரமற்றவன் - இன்னான் என்னை அடைவான்.

---

# அத்தியாயம் 12. பக்தியோகம்.

அர்ஜுனன்:— இவ்விதம் யுக்த மனசோடு ஸததம் உன்னை யுபாசிக்கும் பக்தர்களா, அல்லது அவ்யக்த அக்ஷரத்தை உபாஸிப்பவர்களா, இவர்களில் யார் யோகவித்தமர்கள்? (யோகத்தை நன்ருய் அறிந்தவர்கள்?)

ஸ்ரீபகவான்:— பரம ச்ரத்தையுடன் கூடினவராய் என்னிடத்திலேயே மனசை செலுத்தி, நித்ய யுக்தராய் யார் என்னை உபாசிக்கிருர்களோ, அவர்கள் யுக்தாத்மாக்களென்று கருதுகிறேன். இந்த்ரியக் கூட்டத்தை நியமப்படுத்தினவரும், எல்லாரிடத்தும் சம புத்தி யுடையவரும், சர்வபூத, ஹிதேரதரு (எல்லா ஜீவன்களின் நன்மையைத் தேடுவதில் ஆனந்திப்பவரு) மான யார், விவரிக்க முடியாததும், அவ்யக்தமானதும், எங்கும் இருப்பதும், அசிந்த்யமானதும் (சிந்திக்க முடியாததும்), அசைக்க முடியாததும், அசையாததும். ஸ்திரமானதுமான என் அக்ஷரஸ்வரூபத்தை உபாசிக்கிருர்களோ, அவர்களும் என்னையே அடைகிருர்கள். அவ்யக்தத்தில் ஆஸக்த மனமுடையவர்களுக்கு க்லேசம் (கஷ்டம்) அதிகதரம். தேகத்தையே ஆத்மாவாக அபிமானிப்பவர்களுக்கு அவ்யக்த கதி நேருவது கஷ்டம். பார்த்தா, என்னையே பரமாகக்கொண்டு, சர்வ கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து, அனன்ய யோகத்தால் யார் என்னையே த்யானித்து உபாஸிக்கிருர்களோ என்னில் ப்ரவேசித்த சித்தத்தர்களான அவர்களை மிருத்யுவாதிய சம்சார சாகரத்திலிருந்து சீக்கிரமாகவே நான் கரையேற்றுபவனுகிறேன்.

உன் மனசை என்னிடத்திலேயே நிலைக்கச்செய். உன் புத்தியும் என்னிடத்தில் ப்ரவேசிக்கட்டும். அதன் பிறகு நீ என்னிடத்திலேயே சம்சயமின்றி வாசம் செய்வாய்.

தனஞ்ஜய, என்னிடத்தில் உன் மனசை நிறுத்த உனக்கு சக்தி இல்லாமற்போனால், அப்பொழுது அப்பியாச யோகத்தால் என்னையடைய விரும்பு. அப்படி அப்பியாசத்திலும் நீ சமர்த்தன் இல்லாத பக்ஷத்தில், என் பரமகர்மத்தைச் செய்பவனாய் இரு. என்பொருட்டுக் கர்மங்களைச் செய்து கொண்டு நீ சித்திபெறுவாய் (will attain perfection.) என்னிடம் பக்தியோகத்தை ஆச்ரயித்து, இது செய்யக்கூட நீ அசக்தனானால், அப்பொழுது யதாத்மவானாய் (நியமமான மனமுடையவனாய்), சர்வகர்ம பலன்களையும் துற. அப்பியாசத்தைக்காட்டிலும் ஞானம் சிரேஷ்டம், ஞானத்தைக்காட்டிலும் தியானம் சிரேஷ்டம். தியானத்தைக்காட்டிலும் கர்மபலத்யாகம் சிரேஷ்டம். தியாகத்திலிருந்து பின் சாந்தி பிறக்கும்.

சர்வ பூதங்களையும் த்வேஷிக்காதவனாய், மைத்ரியும் (அன்பும்) கருணையும் கூடி, மமகாரம் அகங்காரங்களற்று, சுகதுக்கங்களில் சமமாய் இருந்துகொண்டு, க்ஷமிக்கும் தன்மையுனாய், சந்துஷ்டனாய், ஸததம் யோகியாய், யதாத்மாவாய் (முயற்சியுடையவனாய்), திடமான நிச்சயமுள்ள எந்த என் பக்தன் தன் மனசையும் புத்தியையும் எனக்கு அர்ப்பிக்கிறானோ அவன் எனக்குப்பிரியன். எவனைக்கண்டு உலகத்தார் மனங் கலங்குகிறதில்லையோ, எவன் உலகைக்கண்டு தானும் மனங் கலங்குகிறதில்லையோ, எவன் மகிழ்ச்சி, கோபம், பயம் இவைகளின் வேகத்திலிருந்து விடுபட்டவனோ, அவன் எனக்குப் பிரியன். ஒன்றிலும் அபேக்ஷை (பற்று) யில்லாதவன், சுசிமான், சமர்த்தன், உதாஸீனன், ஆயாசமற்றவன், சர்வ ஆரம்பங்களையும் த்யாகம் செய்தவன் ஆன என் பக்தன் எனக்குப்பிரியன். மனமகிழ்ச்சி மனச்சோர்வு த்வேஷம் இவைகளின்றி, எதையும் விரும்பாமலும் இருந்துகொண்டு, சுப அசுபங்களை விட்ட பக்திமான் எனக்

குப்பிரியன். சத்ருமித்திரர்களிடம் சமபாவம் கொண்டவன், அப்படியே மான அவமானங்களிலும், சீதோஷ்ண சுகதுக்கங் களிலும் சமமாய் இருப்பவன், எந்த வஸ்துவிலும் ஸங் கத்தை விட்டவன், நிந்தையிலும் துதியிலும் துல்யன் (சமன்), மௌனீ, கிடைத்ததைக்கொண்டு சந்துஷ்டி அடைபவன், தனக்கென்று வீடில்லாதவன், இப்பேர்ப்பட்ட ஸ்திரமதியான பக்திமான் எனக்குப் பிரிய நரன் (என் அன்பிற்கிடமான மனிதன்).

இந்த அமிர்தமான தர்மத்தை என்னிடம் பரம பக்தி சிரத்தையுடன் எவன் மேற்சொன்னபடி அநுசரித்து, என்னை உபாசிக்கிறானோ அவன் எனக்கு அதிப்பிரியன்.

---

# மூன்றாம் பாகம்-அத்தியாயம் 13-18.



## அத்யாயம் 13. க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞ விபாகயோகம்.

அர்ஜுனன்:—கேசவா, ப்ரக்ருதி, புருஷன், க்ஷேத்ரம், க்ஷேத்ரஞ்ஞன், ஞானம், ஞேயம், இவைகளைப்பற்றி யறிய விரும்புகிறேன்.

ஸ்ரீ பகவான் :— கௌந்தேயா, இந்தச் சரீரம்தான் க்ஷேத்ரம் எனப்படுகிறது. இதை எவன் அறிகிறானோ அவனை க்ஷேத்ரஞ்ஞன் என்று அதை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். பாரதா, சர்வ க்ஷேத்ரங்களிலும் நான்தான் க்ஷேத்ரஞ்ஞன் என்று தெரிந்துகொள். க்ஷேத்ரம் க்ஷேத்ரஞ்ஞனைப்பற்றிய ஞானம்தான் ஞானம் என்பது என் மதம்.

அந்த க்ஷேத்ரம் எது, எப்பேர்ப்பட்டது, என்ன விகாரங்களுடையது, எதிலிருந்து உண்டானது, என்ன ஸ்வரூபமுடையது; அந்த க்ஷேத்ரஞ்ஞன் யார், என்ன ப்ரபாவம் (மகிமை) உடையவன், ஆகிய இவைகளை என்னிடம்சமாசமாய் (சுருக்கமாய்) க் கேள். இதைப்பற்றி ரிஷிகள் வெவ்வேறு சந்தஸ்களில் பலவாறு தனித்தனியாய் பாடியிருக்கிறார்கள். ஊகம் நிறைந்தவையும், நிச்சயிக்கப்பட்ட பொருளுடையவையுமான ப்ரம்ம ஸூத்திர பதங்களாலும் சொல்லப்பட்டுள்ளது.

க்ஷேத்ரம் விகாரங்களோடு இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது: பஞ்ச மகாபூதங்கள் (ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்), அகங்காரம், புத்தி, அவ்யக்தம் (மூலப்ரக்ருதி-subconscious mind), கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரி

யங்கள் ஐந்து ஆக பத்து இந்திரியங்கள், ஏகமாகிய மனசு, இந்திரிய கோசரங்கள் (இந்திரியங்களுக்கு ஆகாரமான விஷயங்கள்: சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தம்) ஐந்து, இச்சை த்வேஷம், சுகம் துக்கம், பஞ்ச மகா பூதங்களும் இந்திரியங்களும் சேர்ந்ததாகிய ஸங்காதம் (தொகுதி - சரீரம்), சைதன்யம் (உணர்ச்சி), உறுதி என இவை.

ஞானம் என்று சொல்லப்பட்டிருக்கின்றவையாவன:— அமானித்வம் ("நான்" என்பது இல்லாமை), அதம்பித்வம் (டம்பம் இல்லாமை), அகிம்சை, க்ஷாந்தி, ஆர்ஜவம் (திரிகரணமும் ஒரேவிதமாய் ப்ரவிருத்தித்தல் - rectitude), ஆசார்யோபாஸனம், சௌசம் (சுசித்வம்), சித்தஸ்திரம் (ஸ்தைர்யம்), ஆத்ம நிக்ரகம், இந்திரிய விஷயங்களில் வைராக்யம், அனகங்காரம், ஜன்மம் ம்ருத்யு ஜரை (பிறப்பு, இறப்பு, கிழத்தனம்), வியாதி ஆகிய இத்துக்கங்களின் தோஷ அனுதரிசனம் (தோஷத்தை தெளிதல்), பற்றின்மை, புத்ரன் தாரம் (மனைவி) கிருகாதிகளில் உடைமைத்தனம் பாராட்டாமை, இஷ்டம் அநிஷ்டம் எதுநேரினும் நித்ய சமசித்தத்வம், (என்னிடத்திலுள்ள) வ்யபசரிக்காத அனன்ய யோகபக்தி, தனி இடங்களை சேவித்தல் (நாடுதல்), ஜனக்கூட்டத்தில் ப்ரியமின்மை, அத்யாத்ம ஞானத்தில் நித்யமாய் நிலைபெற்றிருத்தல், தத்வஞானார்த்த தரிசனம் (உண்மை ஞானத்தின் பொருளை அறிதல்) என்னும் இவை. இவற்றிற்கு அன்னியமானவையெல்லாம் அஞ்ஞானம்.

ஞேயம் எதுவென்று சொல்லுகிறேன். அதையறிந்து ஜீவன் அமிர்தம் பெறுகிறான் (attains Immortality.) அநாதியான பரப்ரம்மம் ஸத்துமில்லை அஸத்துமில்லை என்று சொல்லப்படுகிறது. அந்த ஆத்மஸ்வரூபம் எங்கும் கைகால்களும், எங்கும் கண்களும் தலைகளும் வாய்களும், எங்கும்

காதுகளும் உடையவனாய் சர்வத்தையும் வ்யாபித்திருக்கிறான். அவன் சர்வ இந்திரியங்களினுமிருந்து விடுபட்டிருந்தாலும், சர்வ இந்திரியங்களின் குணத்தால் ப்ரகாசிப்பவன். சர்வத்தையும் தரிப்பவனாயினும், எதிலும் சங்கமற்றவன் ; நிர்க்குணனாயினும் குணங்களை அனுபவிப்பவன். அவன் பூதங்களின் உள்ளும் புறமுமாய் இருப்பவன். சரமும் அசரமுமாயிருப்பவன். சூக்ஷ்மமானவனாதலால் அறிய முடியாதவன். தூரத்திலுமுள்ளவன், சமீபத்திலுமுள்ளவன். அவிபக்தனானாலும், பூதங்களில் பிரிவுபட்டவன்போல் இருந்துகொண்டு பூதங்களைத் தரிக்கிறவன். அன்னாதிகளை (உணவு முதலியவற்றை)க் கிரகித்துப் புஜிப்பவனும், அவற்றின் பரிணாமங்களுக்கு ஏதுவுமாக (வேறுபாடுகளுக்குக் காரணமுமாக) அறியத் தக்கவன். அவன் ஜோதிர்கணங்களின் ஜோதி; அஞ்ஞானமாகிய தமஸு (இருட்டு) க்கப்பால் உள்ளவன் எனப்படுகிறான். அவன் ஞானமும் ஞேயமுமாய், ஞானத்தால் அடையத்தக்கவனுமாய், எல்லாருடைய இதயத்திலும் நிலைபெற்றிருக்கிறான்.

இவ்விதம் க்ஷேத்ரம், ஞானம், ஞேயம், இவை உனக்கு சங்கிரகமாய்ச் சொல்லப்பட்டது. இவைகளை யறிந்து என் பக்தன் என்னையடைய அர்கனாகிறான். ப்ரக்ருதி புருஷன் இருவரும் அனாதி என்றறி. விகாரங்களும் குணங்களும் ப்ரக்ருதி சம்பவமானவை என்றறி. காரியம், காரணம், கர்த்ருத்வம் இவைகளுக்குக் காரணம் ப்ரக்ருதி எனப்படுகிறது. சுக துக்கம் அனுபவிப்பதில் புருஷன் காரணம் எனப்படுகிறான். புருஷன் ப்ரக்ருதியிலிருந்துகொண்டு, ப்ரக்ருதி ஜனித (ப்ரக்ருதியிலிருந்துண்டான) குணங்களை அநுபவிக்கிறான். அவன் ஸத்யோனிகளிலும் அஸத்யோனிகளிலும் (கருவிலும்) பிறப்பதற்கு அவனுடைய குணஸங்கம் காரணம். தேகத்திலிருக்கும் இப்பரமனான புருஷன் உப

திருஷ்டா (மேல்பார்வைக் காரன் ), தேகம் மனம் இந்திரியங்கள் இவைகளை அனுமதிக்கிறவன், பர்த்தா (தரிக்கிறவன்), போக்தா, பரமேச்வரன், பரமாத்மா. புருஷனையும், குணங்களோடு கூடின ப்ரக்ருதியையும் எவன் இப்படி அறிகிறானோ, அவன் எந்த வ்ருத்தியிலிருந்தாலும் மறுபடியும் பிறக்கிறதில்லை.

சிலர் தியானத்தால் ஆத்மாவில் ஆத்மாவை அறிகிறார்கள். மற்ற சிலர் சாங்கிய யோகத்தாலும், வேறு சிலர் கர்மயோகத்தாலும் ஆத்மாவை அறிகிறார்கள். இவையெல்லாம் தெரியாத இன்னும் சிலர், பிறரிடமிருந்து கேட்டு ஆத்மாவை உபாசிக்கிறார்கள். ச்ருதி பராயணர் (கேள்வியில் சிரத்தையுள்ளவர்)களான அவர்களும் ம்ருத்யுவினின்று கரையேறுகிறார்கள்.

பரதரிஷப, ஸ்தாவர ஜங்கமங்களில் எது உண்டானாலும், அது க்ஷேத்ர க்ஷேத்ரஞ்ஞ சம்யோகத்தால் உண்டானதென்று அறி. பரமேச்வரன் சர்வ பூதங்களிலும் சமமாக நிலைபெற்றிருப்பவனாகவும், தேகங்கள் அழிகையில் அவன் அழியாதவனாகவும் எவன் அறிகிறானோ அவனே அறிகிறான். எல்லா ஜீவர்களிடத்திலும் நன்கு நிலைபெற்றிருக்கும் ஈச்வரனை சமமாய்ப் பார்ப்பவன் தன்னைத்தான் இம்சித்துக் கொள்ளான். அதனால் அவன் பரமகதியை அடைகிறான். எங்கும் கர்மங்கள் ப்ரக்ருதியினால் செய்யப்படுகின்றனவேயன்றி, ஆத்மா அவற்றிற்குக் கர்த்தா ~~இல்லை~~ என்று எவன் அறிகிறானோ அவனே அறிகிறான். பூதங்களின் வெவ்வேறு பாவங்கள் ஒன்றிலே நிலைத்தவையென்றும், அந்த ஒன்றிலிருந்து அவை விஸ்தாரம் அடைபவையென்றும், எப்பொழுது அறிகிறானோ, அப்பொழுது அவன் பிரமத்தை அடைகிறான்.

கௌந்தேயா, இந்தப்பரமாத்மா சரீரத்தில நிலைபெற்றிருந்தாலும், அவன் அனுதியானவன், நிர்க்குணன், அழிவற்றவன். அவன் ஒன்றும் செய்கிறதுமில்லை; ஒன்றிலும் ஒட்டுகிறதுமில்லை. எங்கும் நிறைந்திருக்கும் ஆகாசம் சூக்ஷ்மமாயிருப்பதால் எப்படி எதாலும் கறையாக்கப்படுகிறதில்லையோ, அப்படி சர்வதேகங்களிலும் நிலைபெற்றுள்ள ஆத்மா அவற்றின் குணங்களால் கறையாக்கப்படுகிறதில்லை. பாரதா, ஒரே சூரியன் இந்தலோக முழுவதையும் எப்படி ப்ரகாசிப்பிக்கிறுனே, அப்படி க்ஷேத்ரஞ்ஞன் க்ஷேத்ரங்களனைத்தையும் ப்ரகாசிப்பிக்கிறுன்.

க்ஷேத்ரம், க்ஷேத்ரஞ்ஞன் இவர்களின் வேறுபாட்டையும், பூதங்கள் ப்ரக்ருதியினின்று ஞானத்தால் விடுதலையடையும் விதத்தையும் அறிகிறவர்கள் பரத்தை யடைகிறுர்கள்.

---

## அத்யாயம் 14. குணத்ரய விபாகயோகம்.

ஸ்ரீபகவான்:— சர்வ முனிகளும் எதை யறிந்து இந்த சம்சாரத்திலிருந்து விடுபட்டு பரமசித்தி அடைந்தார்களோ, ஞானத்துக்கெல்லாம் உத்தமமான அந்தப் பரம ஞானத்தை உனக்கு மறுபடியும் சொல்லுகிறேன். இந்த ஞானத்தை யாச்ரயித்து என் இயல்பை யடைந்தவர்கள், சிருஷ்டியில் பிறக்கிறதுமில்லை, ப்ரளயத்தில் அழிகிறதுமில்லை.

மகத் ப்ரம்மம் (மகத் பூதம்—ஜட ப்ரக்ருதி) என் யோனி (கருப்பை); அதில் நான் கருவைக்கிறேன். பாரதா, அதிலிருந்து சர்வ பூதங்களின் சம்பவமும் நிகழ்கின்றது. கௌந்தேயா, சர்வ யோனிகளினின்றும் பிறக்கும் மூர்த்திகள் எவையோ அவற்றின் யோனி மகத் ப்ரம்மம், நான் அதில் பீஜப்ரதானம் செய்யும் (விதைபோடும்) பிதா.

ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற குணங்கள் ப்ரக்ருதி சம்பவங்கள். மகாபாகோ, இக்குணங்கள் தேகத்திலிருக்கும் அழிவற்றவனாகிய தேகியை (ஆத்மாவை)ப் பந்திக்கின்றன. தோஷமற்றவனே, அவற்றில் ஸத்வ குணம், தன் நிர்மலத் தன்மையால் ப்ரகாசிப்பதும், ஆரோக்யமானதுமாய், சுகப் பற்றுலும் ஞானப்பற்றுலும் தேகியை (ஆத்மாவை)ப் பந்திக்கிறது. ரஜோகுணமானது ராகம், அவா, ஸங்கம் இவைகளை யுண்டாக்குவதாக அறி. கௌந்தேயா, அது கர்ம ஸங்கத்தால் (பற்றால்) தேகியைப் பந்திக்கிறது. தமசானது அஞ்ஞானத்தை விளைவிப்பதும், சர்வ தேகிகளையும் மோகிப்பிப்பதென்றும் அறி. அது அஜாக்கிரதை, ஆலஸ்யம் (தாமஸம்—delaying), நித்திரை இவைகளால் பந்திக்கிறது. பாரதா,

ஸத்வகுணம் சுகத்தில் ப்ரவிருத்திப்பிக்கும் (செலுத்தும்); ரஜஸ் கர்மத்திலும், தமஸ் ஞானத்தை மூடிக்கொண்டு அஜாக்கிரதையிலும் ப்ரவிருத்திப்பிக்கும்.

பாரதா, ரஜஸையும் தமஸையும் அடக்கி ஸத்வ குணம் தலையெடுக்கிறது. அதுபோலவே, ஸத்வத்தையும் தமசையும் அடக்கி ரஜசும், ஸத்வத்தையும் ரஜஸையும் அடக்கி தமசும் தலையெடுக்கின்றன. இந்த தேகத்தின் சர்வ இந்திரியங்களிலும் எப்பொழுது ஞானப்ரகாசம் உண்டாகிறதோ, அப்பொழுது ஸத்வம் விருத்தியடைந்திருக்கிறதென்று தெரிந்துகொள். பரதரிஷப, லோபம், ப்ரவிருத்தி, கர்ம ஆரம்பங்கள், அசமம் (மனசு சமாதான மின்மை), விஷய இச்சை இவைகள் ரஜோ குணம் விருத்தியடைந்து உண்டாகின்றன. அப்பிரகாசம், ஆலஸ்யம், அஜாக்ரதை, மோகம் இவை தமஸ் விருத்தியாகும்போது உண்டாகின்றன.

ஸத்வம் ப்ரவிருத்தித்திருக்கையில் தேகத்தைத் தரிக்கிறவன் ப்ரளயமானால் (இறந்தால்) உத்தம தத்வத்தை யறிந்தவர்களின் அமல (மாசற்ற) லோகங்களை யடைகிறான். ரஜஸ் ப்ரவிருத்தித்திருக்கையில் ப்ரளயமானால், அவன் கர்மப் பற்றுள்ளவர்களிடையில் பிறக்கிறான். அப்படியே தமஸில் ப்ரளயமானால் மூடயோனிகளில் பிறக்கிறான்.

ஸத்வ இயல்புடையவனின் ஸுக்ருத கர்மத்துக்குப் பலம் நிர்மலத்தன்மை என்றும், ராஜஸ குணத்துக்குப் பலம் துக்கமென்றும், தமஸுக்குப் பலம் அஞ்ஞானம் என்றும் சொல்லுகிறார்கள். ஸத்வ குணத்திலிருந்து ஞானம் பிறக்கிறது; ரஜோ குணத்திலிருந்து லோபமும் (miserliness),

தமஸிலிருந்து அஜாக்கிரதை, மோகம், அஞ்ஞானம் இவைகளும் பிறக்கின்றன.

ஸத்வத்தில் நிலைபெற்றவர்கள் மேலான பதவியையடைகிறார்கள். ராஜஸர்கள் மத்தியில் (மனுஷ்ய லோகத்திலேயே) நிற்கிறார்கள். தாமசர்கள் நீசகுண வ்ருத்தியில் நிலைபெற்று அதோகதி செல்கிறார்கள். குணங்களைக் காட்டிலும் அன்னிய கர்த்தா இல்லை யென்பதையும், குணங்களுக்குப் பரமானதையும் ஞானி எப்பொழுது காண்கிறானோ, அப்பொழுது அவன் என் பாவத்தை யடைகிறான். தேகத்திலுண்டாகும் இம் முக்குணங்களையும் தேஹி அதிக்ரமித்து (தாண்டி), ஜன்மம், மிருத்யு, ஜரை, ஆகிய துக்கங்களிலிருந்து விடுபட்டவனாய் அம்ருதத்தை அநுபவிக்கிறான் (tastes Immortality).

அர்ஜுனன் :— ப்ரபோ, முக்குணங்களையும் அதிக்ரமித்தவன் (தாண்டினவன்-transcended) என்ன அடையாளங்களோடிருப்பான் ? அவன் என்ன ஆசாரங்களை யுடையவன் ? அவன் எப்படி இம் முக்குணங்களையும் அதிக்ரமிக்கிறான் ?

ஸ்ரீபகவான் :— பாண்டவா, குணாதீதன் ஸத்வ குணத்தின் ப்ரகாசத்தையும், ரஜஸின் ப்ரவிருத்தியையும் தமஸின் மோகத்தையும், அவை முறையே ப்ரவ்ருத்திக்கையில் வெறுக்கவும் மாட்டான், அவை இல்லாதபோது அவைகளை விரும்பவும் மாட்டான். அவன் உதாஸீனனைப்போல் இருந்துகொண்டு குணங்களால் கலங்காமல், குணங்கள் தோன்றுகின்றன என்று சலிக்காதிருப்பான். அவன் துக்க சுகங்களில் சமமாயிருப்பவன்; ஆத்மாவிலேயே ஊன்றினவன்; மண்ணாங்

கட்டி, கல், பொன், இவைகளைச் சமமாக நினைப்பவன் ; ப்ரியம் நேர்ந்தாலும், அப்ரியம் நேர்ந்தாலும் சமமாயிருப்பவன்; தீரன், நிந்தையிலும் துதியிலும் சமபாவ முடையவன், மான அவமானங்களில் சமசித்த முடையவன்; மித்ரர் சத்துருக்களிடம் சமமாய் இருப்பவன், சர்வ ஆரம்பங்களையும் விட்டவன் என்று சொல்லப்படுகிறான்.

வ்யபசரியாத பக்தியுடன் எவன் என்னை சேவிக்கிறானோ அவன் இக்குணங்களைக் கடந்து ப்ரம்மத்தை யடைய அர்கனாகிறான். ஏனெனில் அம்ருதமும் அவ்யயமுமான ப்ரம்மமும் (the Eternal which is Immortal and Indestructible), சாச்வதமான தர்மமும், முடிவற்ற சுகமும் (unending Bliss) என்னில் ப்ரதிஷ்டையாயிருக்கின்றன (நிலைத்திருக்கின்றன).

---

## அத்யாயம் 15. புருஷோத்தம ப்ராப்தியோகம்.

ஸ்ரீபகவான்:— மேலே மூலமும் (வேரும்) கீழே கிளைகளுமுள்ள அச்வத்தமரம் அழிவற்றதென்கிறார்கள். வேத சந்தஸ்கள் அதன் இலைகள்; இதை யறிந்தவனே வேதவித்; அம்மரம் குணங்களால் போஷிக்கப்பட்டு விஷயங்களைத் தளிராக உடையது; அதன் கிளைகள் கீழும் மேலும் படர்ந்திருக்கின்றன. அதன் வேர்கள் மனிதலோகத்தில் பந்திக்கும் கர்மங்களைத் தொடர்ந்து கீழ் நோக்கிப் பரவுகின்றன. அதன் ஆதி, அந்தம், ஆதாரம், ரூபம் இவையொன்றையும் இங்கிருப்பவர் அறியார். ஆழமான ஆணிவேருள்ள இந்த அச்வத்த மரத்தை த்ருடமான "அஸங்கம்" என்கிற கத்தியால் சேதித்து, பிறகு எங்கு சென்றால் திரும்புகிறதில்லையோ அந்த பதத்தைத் தேடவேண்டும். "சம்சாரம்" என்கிற இந்த விருக்ஷத்தின் ப்ரவ்ருத்தி புராதனமாய் யாரிடமிருந்து ப்ரசரிக்கிறதோ அந்த ஆதி புருஷனையே சரணம் அடையவேண்டும். அமூடர்கள் (விவேகிகள்) மானம், மோகம் இவையின்றி, ஸங்க தோஷங்களை வென்று, நித்யம் ஆத்ம நிலையில் இருந்து கொண்டு, கர்மங்களை நீக்கி, சுகதுக்க முதலிய த்வந்த்வங்களிலிருந்து விடுபட்டு, அந்த அழிவற்ற பதத்தை யடைகிறார்கள். அதை சூரியனாவது, சந்திரனாவது, அக்னியாவது ப்ரகாசிப்பிக்கிறதில்லை, அதை யடைந்து யாரும் திரும்புகிறதில்லை. அது என் பரந்தாமம்.

என் ஓர் அம்சமும் சநாதனனுமான ஜீவபூதன் ஜீவலோகத்தில், ப்ராக்ருதியில் நிலைபெற்றவையும், மனசை ஆறாவதாக உடையவையுமான இந்திரியங்களை இழுக்கிறான். ஆத்மாவான அவன் ஒரு சரீரத்தை யடையும்போதும், அதிலிருந்து

வெளிப்படும்போதும், புஷ்பங்களிலுள்ள மணத்தைக் காற்று கொண்டு போவதுபோல, அந்த ஈச்வரன் இந்த இந்திரியங்களைக் கிரகித்துக்கொண்டு போகிறான். காது, கண், தோல், நாக்கு, மூக்கு, மனம் இவைகளில் அவன் இருந்துகொண்டு விஷயங்களை அநுபவிக்கிறான். அவன் சரீரத்திலிருந்து வெளிப்படுவதையும், சரீரத்திலேயே நிலைத்திருப்பதையும், சரீரத்திலிருந்துகொண்டு குணங்களோடு கூடி விஷயங்களை அநுபவிப்பதையும் மூடர்கள் பார்க்கிறதில்லை. ஞான திருஷ்டியுள்ளவர்கள் அறிகிறார்கள். முயற்சிக்கும் யோகிகள் தங்கள் ஆத்மாவில் நிலைபெற்றிருக்கும் இந்த ஈச்வரனைக் காண்கிறார்கள். பக்குவமில்லாத சித்தத்தர் (சித்தசுத்தி யில்லாதவர்), அதாவது அசேதனர் முயற்சித்தும் அவனைக் காண்கிலர்.

அகில ஜகத்தையும் (எல்லா உலகையும்) ப்ரகாசிப்பிக்கும் சூரியனுடைய தேஜசும், சந்திரனுடையதேஜசும், அக்னியினுடைய தேஜசும் என்னுடையதென்றே அறி. நான் சூரிய கிரணங்களால் நிலத்தில் ஆவேசித்து என் ஓஜஸினால் பூதங்களை தரிக்கிறேன். நான் ரஸாத்மகமான ஸோமமாய் (live-sap) இருந்துகொண்டு, சந்திர கிரணங்களால் ஔஷதிகளைப் (herbs) போஷிக்கிறேன். நான் அக்னி ஸ்வரூபமாய் ப்ராணிகளின் தேகங்களை ஆச்ரயித்து, ப்ராண அபான வாயுக்களோடு கலந்துகொண்டு நாலுவித அன்னத்தை ஜீர்ணம் செய்கிறேன்.

நான் எல்லாருடைய இதயத்தையும் ஆசனமாக்கிக் கொண்டிருக்கிறேன். என்னிடமிருந்துதான் ஞாபகம், ஞானம், ஊகை என இவையெல்லாம் உண்டாகின்றன. சர்வ வேதங்களாலும் அறியத்தக்கவன் நானே. வேதாந்தத்தைச் செய்தவனும் நான், வேதவித்தும் நான்.

இவ்வுலகில் "க்ஷரம்" "அக்ஷரம்" என இரு புருஷர்கள் இருக்கிறார்கள். சர்வ பூதங்களும் "க்ஷரம்" என்றும், ப்ரக்ருதி விகாரங்களுக்கு அன்னியமான கூடஸ்தன் "அக்ஷரம்" என்றும் சொல்லப்படுகிறார்கள் இவர்களன்றி இன்னொரு உத்தம புருஷனும் இருக்கிறான். அவனைப் "பரமாத்மா" என்கிறார்கள். அவன் அழிவற்ற ஈச்வரன். அவன் மூவுலகங்களிலும் ப்ரவேசித்து அவற்றைத் தரிக்கிறான். நான் க்ஷரத்தை அதிக்ரமித்து அக்ஷரத்திற்கும் உத்தமனாயிருத்தலால், வேதத்திலும் உலகத்திலும் நான் "புருஷோத்தமன்" என்று ப்ரசித்தி பெற்றிருக்கிறேன். பாரதா, எவன் மோக மற்று, இப்படி என்னைப் புருஷோத்தமனாக அறிகிறானோ சர்வவித்தான (எல்லாம் தெரிந்த) அவன் தன் முழு பாவத்துடன் என்னைப் பஜிக்கிறான். பாரதா, அநக (தோஷ மற்றவனே), இந்த குஹ்யதம (பரம ரகஸ்ய) சாஸ்திரம் இவ்விதம் என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. இதை யறிந்தவன் புத்திமானும் கிருதக்ருத்யனு (செய்யவேண்டியதை செய்தவனு)மாகிறான்.

---

# அத்யாயம் 16.

## தைவாசுரசம்பத் விபாகயோகம்.

ஸ்ரீ பகவான் :— பாரதா, தேவ சம்பத்தோடு பிறந்தவரிடம் இவை இருக்கின்றன :—அபயம், ஸத்வ சந்துஷ்டி, ஞானயோகத்தில் நிலைபெற்றிருத்தல், தானம், தமம், யஞ்ஞம், வேதம் ஓதுதல், தவம், நேர்மை (ஆர்ஜவம்—மனோவாக்கு காயம் ஒன்றுபட்டிருத்தல்), அஹிம்சை, சத்யம், க்ரோதமின்மை, த்யாகம், சாந்தி, கோட்சொல்லாமை, பூததயை (ஜீவகாருண்யம்), விஷயங்களில் அவாவற்றிருத்தல், ம்ருதுத்வம் ("சாது ஜனங்களோடு கலந்திருக்க அர்கனாயிருத்தல்"), துஷ்கார்யம் செய்வதில் வெட்கம், சபலமின்மை.

பாரதா, அசுரசம்பத்தோடு பிறந்தவரிடம் — டம்பம், செருக்கு, சுய அபிமானம், க்ரோதம், பிறருக்கு வருத்தம் உண்டுபண்ணும் ஸ்வபாவம், அஞ்ஞானம் என இவையிருக்கும்.

தைவசம்பத்து மோக்ஷத்திற்கும் (freedom), அசுர சம்பத்து பந்தத்திற்கும் (bondage) ஏதுவென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. பாண்டவா, வருந்தாதே, நீ தைவ சம்பத்தோடு பிறந்திருக்கிறாய்.

ஆ| லோகத்தில் பூதங்களின் சிருஷ்டி தைவம் ஆசுரம் என இருவகை. தைவஸ்வபாவமுள்ள சிருஷ்டி விஸ்தாரமாக உனக்குச் சொல்லப்பட்டது. பாரதா, அசுரஸ்வபாவ சிருஷ்டியை இப்பொழுது என்னிடம் கேள்.

அசுர ஸ்வபாவமுடைய ஜனங்கள் செய்யவேண்டியதையும் தவிர்க்கவேண்டியதையும் அறியார். அவர்களிடம் சுசி,

ஆசாரம், சத்தியம் இவை கிடையா. ஜகம் அசத்யம், அப்ர திஷ்டம் (பிரம்மத்தில் நிலைபெறாதது), அனீச்வரம் (ஈச்வரன் இல்லாதது) என்றும், ஜகம் நடைபெறுவதற்கு காமத்தையே ஏதுவாகக்கொண்ட பாஸ்பர ஸம்யோகம் அன்றி வேறு என்ன காரணம் என்றும் அவர்கள் சொல்லுகிறார்கள். தங்கள் ஆத்மாவை இழந்தவரும் அல்ப புத்தியருமாகிய அவர்கள் இந்த திருஷ்டி (view, opinion)யை உறுதியாய்க் கைப்பற்றி, உக்கிரமான கர்மங்களைச்செய்துகொண்டு, ஜகத்தின் அஹிதத்திற்கும் க்ஷயத்திற்குமே (கேட்டிற்கும், அழிவிற்குமே) உலகில் தோன்றுகிறார்கள். அவர்கள் நிரப்பமுடியாத பேராசையுடையவர்களாய், டம்பம், அகங்காரம், மதம் இவை கூடினவராய், மோகத்தால் அசத்தான பிடிவாதங்கள்கொண்டு, அசுசியான விரதங்களில் ப்ரவிருத்திக்கிறார்கள். அவர்கள் தங்கள் ப்ரளயாந்தம் (சாகும்வரை), அபரிமித (அளவுகடந்த) சிந்தையை ஆச்ரயித்தவர்களாயும், காம போக (சுக)த்தையே பரமாகக்கொண்டு, இப்படித்தான் என்று தங்களுக்குள் நிச்சயித்தவர்களாயும், நூற்றுக்கணக்கான ஆசாபாசங்களால் கட்டுப்பட்டு, காமக்ரோதங்களுக்கு ஆட்பட்டவராய், காமபோகார்த்தம் அநியாய வழிகளில் பணக் குவியல்களைத் திரட்ட முயல்கிறார்கள். "இது இன்று என்னால் அடையப்பட்டது. இந்த மனோரதத்தை நான் அடைவேன். இவ்வளவு தனம் எனக்கு இருக்கிறது. மீண்டும் இந்தத்தனமும் எனக்குக் கிடைக்கும். இந்த சத்ருக்கள் என்னால் கொல்லப்பட்டார்கள். மற்றவர்களையும் நான் கொல்வேன். நான் பிரபு, நான் போகி, நினைத்தபடி காரியம் சித்திபெறுபவன், நான் பலவான், சுகி, நான் பணக்காரன், உயர்குலத்திற் பிறந்தவன்,

எனக்கு ஒப்பானவன் வேறு யார் இருக்கிறான்? நான் யாகத்துக்காகக் கொடுப்பேன், சந்தோஷிப்பேன்,'' என்று இவ்வாறு அவர்கள் அஞ்ஞானத்தால் மோகித்து, பலவித சித்தப்பிராந்திகொண்டு, மோக ஜாலத்தால் சூழப்பட்டு, காம போகத்தில் பற்றுண்டு, அசுசியான நரகத்தில் விழுகிறார்கள். அவர்கள் தங்களைத் தாங்களே சம்பாவித்து (வெகுமதித்து)க் கொள்பவர்கள், மூர்க்கர்கள், தனம் மானம் (touchy), மதம் இவை நிறைந்தவர்கள். அவர்கள் விதிக்குமாறாய், டம்பத்திற்காக நாம யஞ்ஞத்தால்மாத்திரம் என்னை ஆராதிக்கிறார்கள். அவர்கள், அகங்காரம் பலம் இறுமாப்பு காமம் க்ரோதம் இவைகளை ஆச்ரயித்தவர்களாய், தங்களுடையவும் பிறருடையவும் தேகத்திலிருக்கும் என்னை அசூயையுடன் பகைக்கிறார்கள். அப்படி பகைக்கும் அந்த நர அதமர்களை (மனிதரில் கேடரை) க்ரூரமான சம்சாரத்தில், அசுபமான அசுர யோனிகளிலேயே எப்பொழுதும் நான் தள்ளுகிறேன். கௌந்தேயா, அம்மூடர்கள் ஜன்ம ஜன்மமும் என்னை யடையாமலே அசுர யோனிகளில் விழுந்து, அங்கிருந்து அதமகதியை யடைகிறார்கள்.

காமம் க்ரோதம் லோபம் இம்மூன்றும் ஆத்மாவை நாசம் செய்பவையும் நரகவாயிலுமாய் இருக்கின்றன. ஆகையால் அவை மூன்றையும் த்யஜிக்க (விலக்க) வேண்டும். கௌந்தேயா, இருட்டுவாயில்களான இம்மூன்றினின்றும் விடுபட்டவன், தன் ச்ரேயஸ்ஸை ஆச்ரயித்தவனாய், அதிலிருந்து பரமகதி அடைகிறான். எவன் சாஸ்திர விதியைத் தள்ளிவிட்டு தன் இஷ்டம்போல் நடக்கிறானோ, அவன் சித்தியாவது சுகமாவது பரமகதியாவது அடையமாட்டான். ஆகையால் கார்ய

அகார்ய வ்யவஸ்தையில் (எது செய்யவேண்டியதோ, எது செய்யத்தகாததோ என்பதை நிச்சயிப்பதில்) உனக்கு சாஸ்திரம் பிரமாணம். சாஸ்திர விதியை யறிந்து நீ இங்கே கார்யம் செய்ய அர்கன்.

---

# அத்தியாயம் 17. ச்ரத்தாத்ரய விபாகயோகம்.

அர்ஜுனன் :— எவன் ஒருவன் சாஸ்திர விதியைத் தள்ளிவிட்டு, ஆனால் ச்ரத்தையுடன் பகவானை உபாசிக்கிறானோ அவனுடைய ஸ்திதி ஸத்வமா, ராஜஸமா, தாமஸமா?

ஸ்ரீ பகவான் :— தேகியின் ஸ்வபாவத்தால் பிறந்த ச்ரத்தை, ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என மூன்று விதமாயிருக்கிறது. பாரதா, அதைக் கேள். எல்லாருடைய ச்ரத்தையும் அவரவருடைய ஸத்வத்தை (ஸ்வபாவத்தை) யநுசரித்திருக்கும். இந்தப் புருஷன் ச்ரத்தாமயமானவன் (''ச்ரத்தையின் பரிணாமமாய் இருப்பவன்''). எவனுக்கு எந்த சிரத்தை இருக்கிறதோ, அவன் அதுவே. ஸாத்விக ச்ரத்தையுள்ளவர்கள் தேவர்களையும், ராஜஸ ச்ரத்தையுள்ளவர்கள் யக்ஷ ராக்ஷஸர்களையும், தாமச ச்ரத்தையுள்ளவர்கள் ப்ரேதங்களையும் மற்ற பூதகணங்களையும் பூஜிக்கிறார்கள். சாஸ்திர விதியில்லாமல், டம்பத்தையும் அகங்காரத்தையும் முன்னிட்டு, காமம், ராகம், பலஇச்சை இவைகள் கூடினவராய், தங்கள் சரீரத்திலிருக்கும் பூதஸங்காதத்தை (தொகுதியை)யும், அந்தர்யாமியாய் இருக்கும் என்னையும் இம்சித்துக்கொண்டு கோரமான தவம் செய்யும் அசேதனர்களான அந்த ஜனங்கள் அசுரஸ்வபாவ நிச்சயபுத்தியுள்ளவர்கள் என்றறி.

எல்லாருக்கும் ப்ரியமான ஆகாரமும் மூன்று விதமாய் இருக்கிறது. அப்படியே அவர்களுடைய யஞ்ஞமும், தானமும், தவமும். இம்மாதிரியான அவைகளுடைய பேதத்தையும் கேள்.

ஸத்வ குணமுள்ளவனுக்குப் பிரியமான ஆகாரங்கள்: ஆயுள் ஸத்வம் (purity, intelligence) ஆரோக்யம் சுகம் ப்ரீதி இவைகளை விருத்தி செய்பவையும், ரசமுள்ளவையும், தைலம் அல்லது பசை யுள்ளவையும், ஸ்திரமானவையும், (not volatile), மனோகரமானவையும்.

ராஜஸ குணமுள்ளவனுக்கு இஷ்டமானவை:— துவர்ப்பு, புளிப்பு, உப்பு, உஷ்ணம், காரம் உள்ளவையும், வரக்ஷியும் எரிச்சலும் கொடுப்பவையுமான ஆகாரங்கள். அவை துக்கம் சோகம் ரோகம் என்னும் இவைகளை விளைக்கும்.

தாமச குணமுள்ளவனுக்குப் பிரியமான ஆகாரங்கள்: பக்குவமாய் அதிக காலமானது, ரஸம்போனது, அழுகல், பழையது, எச்சில், அமேத்யம் (அசுத்தமானது அல்லது யஞ்ஞத்துக்கு உபயோகிக்கப்படாதது)ம்.

ஸாத்விக யஞ்ஞமாவது, விதிகளில் சொல்லியிருக்கும் யஞ்ஞத்தை, பலத்தைக்கோராமல், இது செய்யத்தக்கது என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு செய்வது. பரதச்ரேஷ்டா, ராஜஸ யஞ்ஞமாவது, பலத்தையும் டம்பத்தையும் கருதி, பற்றுதலுடன் செய்யப்படும் யஞ்ஞம் என்றறி. தாமஸ யஞ்ஞமாவது: விதிஹீனமும் மந்திர ஹீனமுமானதும், அன்னமிடாமலும் தக்ஷிணை கொடாமலும் சிரத்தையில்லாமலும் செய்யப்படும் யஞ்ஞம் என்கிறார்கள்.

சரீரத்தால் செய்யப்படும் தவமாவது, தேவர்கள் த்விஜர்கள் (ஆத்மப் பிறப்பினர்), குருக்கள், ப்ராஞ்ஞர் (அறிஞர்) இவர்களைப்பூஜித்தல்; சௌசம் (சுசித்வம்), ஆர்ஜவம் (திரிகரண சுத்தி), பிரம்மசரியம், அகிம்சை எனப்படும். வாக்கு

ரூபமான தவமாவது: நயமும் சத்யமும் ப்ரியமும் இதமுமான வார்த்தைகளைப்பேசுதல், வேதம் ஓதுதல் எனப்படும். மனசால் செய்யும் தவமாவது: ப்ரசாந்த மனம் உடையராதல், ஸௌம்யத்வம் ("பிறர் ஆக்கத்தில் மகிழ்ச்சி"), மௌனம், ஆத்ம நிக்ரகம் (தன்னடக்கம்), பாவசுத்தி (pure heart) எனப்படும். பலத்தில் ஆசையற்று, யுக்த மனசுடனும் பரமசிரத்தையோடும் நரர்களால் செய்யப்படும் இந்த மூவிதத்தவமும் ஸாத்விகதவம் என்கிறார்கள்.

பிறர் இங்கு தன்னை ஸத்காரம் (கவுரவம்) பெருமை பூஜை இவை செய்யும்பொருட்டும், டம்பத்திற்காகவும் செய்யப்படும் தவம் ராஜஸம் என்கிறார்கள். அது சலனமும் அத்ருவமு (நிலையற்றது)மானது (like the shadow of a tree – it is unsteady and it moves with the sun). மூடத்தனமான துராக்ரகத்துடன் தன்னையே பீடித்துக் கொண்டாவது பிறர் நாசத்தின் பொருட்டாவது செய்யப்படும் தவம் தாமசம் எனப்படும்.

இந்தத் தானம் செய்யத்தக்கது என்கிற எண்ணத்துடன், ப்ரதி உபகாரம் கோராமல், தேசகால பாத்திரத்தையறிந்து செய்யப்படும் தானம் ஸாத்விகம் என்று கருதப்படுகிறது. எது ப்ரதி உபகாரத்தை யெதிர்பார்த்தோ, அல்லது வேறு பலத்தை யுத்தேசித்தோ, அல்லது கஷ்டப்பட்டுக் கொண்டே அரைமனசுடனே செய்யப்படுகிறதோ, அந்த தானம் ராஜஸம் என்று எண்ணப்படுகிறது. அதேசத்தில் அகாலத்தில் அபாத்ரனுக்கு ஸத்காரம் (உபசரிப்பு) இல்லாமலும், அவமதிப்புடனும் செய்யப்படும் தானம் தாமசம் என்று சொல்லப்படுகிறது.

"ஓம் தத் ஸத்" என இது ப்ரம்மத்தை மூன்று விதமாகக் குறிக்கிறதென்று கருதப்படுகிறது. இந்த "ஓம் தத் ஸத்" என்பதால், பூர்வம் ப்ராம்மணர்களும் வேதங்களும் யஞ்ஞங்களும் சிருஷ்டிக்கப்பட்டனர். ஆகையால் யஞ்ஞம் தானம் தவம் என்கிற இந்த கிரியைகள் பிரம்மவாதிகளால் விதிகளில் சொல்லியபடி, எப்பொழுதும் "ஓம்" என்று உச்சரித்து ப்ரவிருத்திக்கப்படுகின்றன. பலத்தை இச்சியாமல் மோக்ஷம்பெற விரும்புவோர், பலவித யஞ்ஞ தவ தானக் கிரியைகளை "தத்" என்று உச்சரித்துச் செய்கிறார்கள். "ஸத்" என்றது "உள்ளது" என்ற பாவத்திலும், "ஸாது" என்ற பாவத்திலும் பேசப்படுகிறது. பார்த்தா, "ஸத்" என்கிற சப்தம் ப்ரசஸ்தமான கர்மத்தைக் குறிக்கவும் ப்ரயோகிக்கப்படுகிறது. யஞ்ஞ தான தவக்கிரியைகளில் நிலை பெற்றிருத்தலும் "ஸத்" எனப்படுகிறது. "தத்" என்றால் பகவான் என்று பொருள், அவனை யுத்தேசித்துச் செய்யப்படும் (யஞ்ஞ தான தவக்) கர்மங்களும் "ஸத்" என்று சொல்லப்படுகின்றன. அசிரத்தையாய்ச் செய்யப்படும் யஞ்ஞ தான தவக்கிரியைகள் "அஸத்" எனப்படுகின்றன. அவைக்கு இகத்திலாவது பரத்திலாவது ஒரு பிரயோஜனமுமில்லை.

---

# அத்யாயம் 18. மோக்ஷசன்யாச யோகம்.

அர்ஜுனன்:— மகாபாகோ, ரிஷிகேசா, கேசிநிஷூதனா, சந்யாசம் தியாகம் என்கிற இவற்றின் வெவ்வேறு தத்வத்தை (உண்மையை) யறிய விரும்புகிறேன்.

ஸ்ரீபகவான்:— காம்ய கர்மங்களை விட்டுவிடுதல் "சந்யாசம்" என்று கவிகள் அறிகிறார்கள். ஞானிகள், சர்வ கர்ம பலத்யாகத்தை "தியாகம்" என்கிறார்கள். சில பண்டிதர் எல்லாக் கர்மங்களும் தோஷம் உள்ளனவாக எண்ணி, அவை தியாஜ்யம் (விடத்தக்கவை) என்கிறார்கள். மற்ற சிலர், யஞ்ஞ தான தவம் ஆகிய கர்மங்களை விடக்கூடாதென்கிறார்கள். பரதஸத்தமா! புருஷ வியாக்ரா (மனிதப்புலி)! தியாகத்தைப்பற்றின நிச்சயத்தை என்னிடம் கேள்.

தியாகம் மூன்று விதமாகக் கூறப்பட்டிருக்கிறது. யஞ்ஞ தான தவக் கர்மங்கள் தியாஜ்யமில்லை. அவை செய்ய வேண்டிய கார்யங்களே. யஞ்ஞமும் தானமும் தவமும் சீலர்களை (ஒழுக்கமுடையவர்களை)ப் பாவனமாக்குபவை. பார்த்தா, மேற்சொன்ன கர்மங்கள், அவற்றில் பற்றையும் பல இச்சையும்விட்டு, செய்யவேண்டியவையே. இதுதான் என் நிச்சயமும் உத்தமுமான மதம் (அபிப்ராயம்). நியமிக்கப் பட்ட கர்மங்களைத் துறத்தல் தகுதியல்ல. மோகத்தால் அவற்றைத் த்யஜித்தல் தாமசமென்று கூறப்படுகிறது. சரீரப்பிரயாசைக்குப் பயந்து, ஒருவனுக்கு நியமமான கர்மங்களை துக்ககரமென்று செய்யாமல் விடுதல் ராஜஸ தியாகம். அப்படி விடுவதால் அவனுக்கு த்யாகத்தின் பலன் கிடைக்காது. நியமிதமான இந்தக் காரியம் செய்யத்தக்கது என்று

எண்ணி, அதில் ஸங்கத்தையும் பலஇச்சையையும் விட்டு, எந்தக் காரியம் செய்யப்படுகிறதோ, அப்போப்பட்ட தியாகம் "ஸாத்விகம்" என்று கருதப்படுகிறது. தியாகி துக்ககரமான கர்மத்தை த்வேஷிக்கிறதுமில்லை (வெறுக்கிறதுமில்லை), ஸந்தோஷகரமான கர்மத்தை விரும்புகிறதுமில்லை. அவன் ஸத்வ குணத்தில் அமர்ந்தவன். மேதாவி, சம்சயங்களைச் சேதித்தவன் (சந்தேகங்களைப் பிளந்தவன்). தேகத்தைத் தரித்தவனுக்கு சிறிதும் சேஷ (மிச்ச)மின்றி கர்மங்களைத் துறத்தல் சாத்யமில்லை கர்மபலத்யாகிதான் "தியாகி" எனப்படுபவன். அத்யாகிகள் (தியாகியல்லாதார்) அனிஷ்டம், இஷ்டம், மிச்ரம் (கலப்பு) என மூவித பலன்களை பிற்காலத்தில் அடைகிறார்கள். சன்யாசிகள் (தியாகிகள்) எப்பொழுதுமே அவ்விதப் பலன்களை யடைகிறதில்லை.

மகாபாகோ, சர்வ கர்மங்களும் சித்திப்பதற்கு இந்த ஐந்தும் காரணங்களென்று 'சாங்கிய'த்தில் சொல்லப்பட்டிருக்கிறது; அவற்றை என்னிடமிருந்து தெரிந்துகொள்: 1. தேகம், 2. கர்த்தா, 3. பலவித கரணங்கள் (இந்திரியங்கள்) 4. வெவ்வேறான பல சேஷ்டைகள் (sub-conscious elements) 5. தைவம். சரீரம், வாக்கு, மனசு இவைகளால் நரர்கள் தொடங்கும் கர்மங்கள் நியாயமானவையானாலும் விபரீதமானவையானாலும், அவைகளுக்கு இவ்வைந்தும் ஏதுக்கள். இது இப்படி இருக்க, அபக்குவ புத்தியுடன், தான்தான் கர்த்தா என்று பார்க்கும் துர்மதி (கெட்டபுத்தியுடையவன்) ஒன்றையும் பார்க்கிறதில்லை. அகங்கார பாவமற்ற எவனுடைய புத்தி சலிக்கிறதில்லையோ, அவன் இந்த ஜனங்களைக் கொன்றாலும், அவன் கொல்கிறதுமில்லை, அதனால் அவன் பந்த (கட்டு)ப்படவும் மாட்டான்.

கர்மத்துக்கு ப்ரேரணம் (தூண்டுதல்) ஞானம், ஞேயம் பரிஞாதா (அறிவு, அறியப்படுவது, அறிபவன்) என மூன்று விதம். கர்ம சங்கிரகமும், (தொகுதியும்) கரணம் (கருவி), கர்மம், கர்த்தா என மூன்றுவிதம்.

ஞானம், கர்மம், கர்த்தா இவை ஒவ்வொன்றும் குண சங்கியைப்படி முக்குண பேதத்திலிருந்து மூன்று விதமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதையும் உள்ளபடி கேள். ஸாத்விக ஞானமானது சர்வ பூதங்களிலும் அழிவற்ற ஏக பாவத்தையும், பிரிந்திருப்பவைகளில் (விபக்தமானவைகளில்) பிரிவின்மையையும் (அவிபக்தத்தையும்) பார்க்கும். சர்வ பூதங்களை அவையவைகளுக்குள்ள நானாபாவங்களால் வெவ்வேறாக அறியும் ஞானம் ராஜஸம் என்றறி. அல்பமானதும் தத்வார்த்தமில்லாததுமான ஏதோ ஒரு காரியத்தை முழுதாகப் பற்றும் ஞானம் தாமசம் எனப்படும்.

பற்றற்று விருப்பு வெறுப்பின்றி பலத்தில் ஆசையை விட்டு ஒருவன் செய்யும் நியமிதகாரியம் ஸாத்விக கர்மம் எனப்படுகிறது. எந்த கர்மம் காம்ய விருப்பத்தாலாவது, அகங்காரத்தாலாவது வெகு ஆயாசத்துடன் செய்யப்படுகிறதோ அது ராஜஸம் எனப்படும். எந்த கர்மம் தன் பௌருஷத்தைக் கவனியாமல் மோகத்தால் ஆரம்பிக்கப்படுகிறதோ, எதனுடைய அநுபந்தம் க்ஷயமும் இம்சையுமோ, அது தாமசமெனப்படும்.

ஸங்கத்தைவிட்டு அகங்காரமற்று மனஉறுதியும் உற்சாகமும் பொருந்தி, சித்தி அசித்திகளில் விகாரமற்றவன் ஸாத்விக கர்த்தா எனப்படுவான். ராகமுள்ளவனும், கர்மபலத்தை

இச்சிக்கிறவனும் லுப்தனும் (லோபி, கிருபணன்) இம்சாத்மாவும். அசுசியாயிருப்பவனும், ஹர்ஷசோகங்களுக்கு (மகிழ்ச்சி சோர்வுக்கு) ஆளானவனும் ஆகிய இப்படிப்பட்ட கர்த்தா, ராஜஸ கர்த்தா என்று சொல்லப்படுகிறான். அயுக்தனும் ப்ராக்ருதனும் (அநாகரிகன்-savage) மூர்க்கனும், வஞ்சகனும், நீச காரியம் செய்பவனும், சோம்பேறியும், துயரப்பட்டுக்கொண்டிருப்பவனும் (given to depression) காலஹரணம் செய்பவனும் ஆகிய இப்படிப்பட்ட கர்த்தா தாமச கர்த்தா என்று சொல்லப்படுகிறான்.

தனஞ்ஜய, புத்தியின் பேதமும், மனோதிடத்தின் பேதமும் முக்குணங்களால் மூன்றுவிதமாய் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதையும் சேஷ (மிச்ச)மில்லாமல் விவரமாய் என்னிடம் கேள். பார்த்தா, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி, கார்யம் அகார்யம், பயம் அபயம், பந்தம் மோக்ஷம் இவைகளையறியும் புத்தி ஸாத்விக புத்தி. தர்மம் அதர்மம், கார்யம் அகார்யம், இவைகளைத் தவறாக அறிகிறபுத்தி ராஜஸ புத்தி. பார்த்தா, அஞ்ஞானத்தால் சூழப்பட்டு அதர்மத்தைத் தர்மமாகவும் எல்லாவற்றையும் விபரீதமாகவும் நினைக்கும் புத்தி தாமச புத்தி.

பார்த்தா, எந்த த்ருடத்தைக்கொண்டு ஒருவன் யோக மூலமாய் தன் மனம் இந்திரியங்கள் பிராணன் இவற்றின் கிரியைகளை வ்யபசரிக்க விடுகிறதில்லையோ, அந்த த்ருதி ஸாத்விகம். அர்ஜுனா, பார்த்தா, தர்மம் காமம் அர்த்தம் இவைகளின் பொருட்டு பற்றுதலோடும் பலத்தை விரும்பியும் ஒருவன் எந்த த்ருடத்தைக் கைப்பற்றுகிறானோ அது ராஜஸம். பார்த்தா, தூக்கம் பயம் சோகம் சோர்வு மதம் இவைகளைக் கைவிடாத த்ருடம் தாமஸம்.

பரதரிஷப, சுகம் மூன்றுவிதம் என்பதைப்பற்றி இப்பொழுது கேள். எதில் அப்பியாசத்தினால் (by practice in meditation) ஒருவன் ரமிக்கிறானோ, எதனால் துக்கத்தினுடைய அந்தத்தையடைகிறானோ, எது ஆரம்பத்தில் விஷம் போலவும் முடிவில் அமிர்தத்தை யொத்தும் இருக்கிறதோ, அவனுடைய ஆத்மபுத்தியின் தெளிவினால் உண்டாகும் அந்தச் சுகம் ஸாத்விக சுகமென்று சொல்லப்படுகிறது. விஷய இந்திரிய ஸம்யோகத்தினால் (by contact of the senses with the sense - objects) உண்டாவதும், ஆரம்பத்தில் அமிர்தம்போலவும் முடிவில் விஷம்போலவும் உள்ள சுகம் ராஜஸ சுகமென்று கருதப்படும். நித்திரை ஆலஸ்யம் அஜாககிரதை இவைகளால் உண்டாவதும், ஆரம்பத்திலும் முடிவிலும் ஒருவனுக்கு மோகத்தை விளைப்பதுமான சுகம் தாமச சுகம் எனப்படும்.

ப்ருதிவி (பூமி)யிலாவது, தேவலோகத்தில் இருக்கும் தேவர்களிலாவது, ப்ரக்ருதி ஜனித (இயற்கையாலுண்டான) இம்முக்குணங்களினின்று விடுபட்ட ஜீவன் எவனும் இல்லை. பரந்தபா, ப்ராம்மணர், க்ஷத்ரியர் வைச்யர் சூத்திரர் இவர்களுடைய கர்மங்கள், அவரவர் ஸ்வபாவத்திற்கேற்ப, மேற்சொன்ன குணப்பாகுபாட்டின்படி விபாகப் (பிரிவு) செய்யப்பட்டிருக்கின்றன. பிராம்மணனுக்கு ஸ்வபாவமாய் ஏற்பட்ட கர்மங்களாவன:—சமம், தமம், தவம், சௌசம், க்ஷாந்தி, ஆர்ஜவம், ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்யம் (theistic endeavour). க்ஷத்ரியனுக்கு ஸ்வபாவமாய் ஏற்பட்ட கர்மங்களாவன:—சௌர்யம், தேஜஸ், த்ருடம், திறமை, யுத்தத்தில் புறங்காட்டாமை, தானம், ஈச்வரத்வம் (lordship). வைசிய

ஸ்வபாவ ஜனித கர்மங்களாவன :— க்ருஷி, கோரக்ஷணம், வாணிஜ்யம் (agriculture, cattle - rearing and trade). சூத்திரனுக்கு ஸ்வபாவ ஜனித (ஸ்வபாவத்தில் பிறந்த) கர்மம், பரிசர்யம் செய்யும் தன்மை (personal service).

நரன் அவனவனுக்கேற்ற கர்மத்தில் நிலைத்திருந்து சித்தி பெறுகிறான்; அவன் ஸ்வகர்மத்தில் நிலைத்து எப்படி சித்தி அடைகிறான் என்பதைக்கேள். யாரிடமிருந்து பூதங்கள் ப்ரவிருத்திக்கின்றனவோ, யாரால் இப்பிரபஞ்சமெல்லாம் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அவனை மனிதன் ஸ்வகர்மத்தால் அர்ச்சித்து சித்திபெறுகிறான். சரியாய் அநுஷ்டிக்கப்பட்ட பரதர்மத்தைக்காட்டிலும், குணமற்றதாயினும் ஸ்வதர்மம் சிரேஷ்டம். ஸ்வபாவ நியதமான கர்மத்தைச்செய்து எவனும் பாவம் அடையமாட்டான். கௌந்தேயா, அவனவனுக்கு சகஜமான கர்மம் தோஷமுள்ளதாயினும் த்யஜிக்கலாகாது. அக்னி தூமத்தால் (புகையால்) சூழப்பட்டிருப்பது போல, சர்வ ஆரம்பங்களும் தோஷத்தால் சூழப்பட்டிருக்கின்றன.

எதிலும் ஸங்கமற்ற புத்தியுடையவனும், தன்னை வென்றவனும், ஆசைகள் நீங்கினவனும் ஆகிய இப்பேர்ப்பட்டவன் சந்யாசத்தால் பரம நைஷ்கர்ம்ய சித்தியை அடைகிறான். கௌந்தேயா, அவ்வித சித்தி ப்ராப்தியாய் அவன் எப்படி பிரம்மத்தையடைகிறானோ, அந்தப் பரம ஞானநிஷ்டையைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன், என்னிடமிருந்து தெரிந்து கொள். புத்தியைக்கொண்டு பரிசுத்தம் அடைந்து, யுக்த மனசுடையவனுய், த்ருடத்தோடு தன்னை நியமப்படுத்திக் கொண்டு, சப்தாதி விஷயங்களை த்யஜித்து, ராக த்வேஷங்களை

தூரத்தள்ளிவிட்டு, தனிமையை நாடுபவனும், குறைந்த ஆகாரம் சாப்பிடுபவனும், ஸ்வாதீனமான வாக்கு உடல் மனம் இவையுடையவனும், தியானயோகபரனும், நித்யம் வைராக்யத்தை ஆசரிக்கிறவனும், அகங்காரம், பலம், கர்வம், காமம், க்ரோதம், பரிக்ரகம் (கைப்பற்றுதல்) இவைகளைவிட்டு, மமகாரமற்று, சாந்தனும் இருப்பவன் ப்ரம்மபூதனுவதற்கு உரியவனுகிறான். ப்ரம்மபூதனுன ப்ரசன்னுத்மா (தெளிந்த மனமுடையவன்) எதற்காகவும் விசனப்படுகிறதுமில்லை, எதையும் விரும்புகிறதுமில்லை. சர்வபூதங்களிலும் சமமாய் இருக்குமவன் பரமான என்பக்தியைப் பெறுகிறான். அப் பக்தியால், நான் யார், எவ்வளவுள்ளவன் என்பதின் தத்வத்தை அவன் அறிகிறான். என் தத்வத்தை யறிந்தபிறகு, அதிலிருந்து என்னில் அதாவது "அதில்" அவன் ப்ரவேசிக்கிறான்.

என்னை ஆச்ரயித்து, சர்வகர்மங்களையும் சதாசெய்து கொண்டிருப்பவன், என்ப்ரசாதத்தால் சாச்வதமும் அழிவற்றதுமான பதத்தை யடைகிறான். ஆகையால் நீ சர்வகர்மங்களையும் மனசால் எனக்கு அர்ப்பணம்செய்து, என்னையே பரமாகக் கொண்டு, புத்தியோகத்தை ஆச்ரயித்து. ஸததம் என்னில் சித்தத்தை வைத்தவனுய் இரு. என் சித்தத்தனுய் இருந்து கொண்டு சர்வ துர்க்கங்களையும் (இடையூறுகளையும்) என் ப்ரசாதத்தால் கடப்பாய். அகங்காரத்தால் நீ கேட்காமற் போனுல் விநாசம் அடைவாய். அந்த அகங்காரத்தை ஆச்ரயித்து, "நான் யுத்தம் செய்யமாட்டேன்" என்று நினைக்கிறாய். அந்த உன் தீர்மானம் வீண். உன் ஸ்வபாவமே சண்டை செய்யும்படி உன்னைக் கட்டாயப்படுத்தும். கௌந்தேயா, உன் கர்மாவைச்செய்ய நீ மோகத்தினுல் இச்சிக்காத

போதிலும், ஸ்வபாவத்திற் பிறந்த உன் கர்மத்தால் நீ கட்டுப் பட்டு அதையே நீ அவசியம் செய்வாய். அர்ஜுன, ஈச்வரன் சர்வ பூதங்களின் ஹ்ருதயங்களிலும் இருந்துகொண்டு, யந்தி ரத்தில் ஏற்றப்பட்ட பொம்மைகள் (குயவன் சக்கிரத்தில் பானை) போல், சர்வ பூதங்களையும் தன் மாயையினால் சுழற்று கிறான். பாரதா, உன் சர்வ பாவத்தாலும் அவனையே சரண மடை. அவன் பிரசாதத்தால் சாச்வதமும் பரம சாந்தியு மான ஸ்தானத்தை யடைவாய். இப்படி உனக்கு குஹ்யமான தைக்காட்டிலும் குஹ்யதரமான ஞானம் என்னால் எடுத்துச் சொல்லப்பட்டது. இதை நீ சேஷ (மிச்ச)மில்லாமல் ஆலோ சித்து எது உனக்கு இஷ்டமோ அதைச்செய்.

மறுபடியும் பரம குஹ்யதமமான (மிக்க ஆழ்ந்த ரகசிய மான) என் பரம வசனத்தை என்னிடமிருந்து கேள். நீ எனக்கு இஷ்டன். இது த்ருடம். அதனால் நான் உன் இதத்தைச் சொல்லுகிறேன். என் மனசனாய் இரு, என் பக்தனாய் இரு, என்னை ஆராதி, என்னை நமஸ்கரி, என்னையே அடைவாய். இது சத்தியம். நான் உனக்குப் பிரதிஞ்ஞை செய்கிறேன். நீ எனக்குப் பிரியன். சர்வ தர்மங்களையும் விட்டு விட்டு, என்னை யொருவனையே சரணமடை. நான் உன்னை சர்வ பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். விசனப் படாதே.

சர்வதர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ,
அகம் த்வா சர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:

இதை நீ ஒருபொழுதும், தவம் இல்லாதவனுக்கும் பக்தியில்லாதவனுக்கும், கேட்க விரும்பாதவனுக்கும், என்னி

டம் அருசுயைப்படுகிறவனுக்கும் சொல்லக்கூடாது. இந்தப் பரம ரகஸ்யத்தை எவன் என் பக்தர்களுக்குச் சொல்வானோ அவன் என்னிடம் பரமபக்தி செய்தவனாய் என்னையே அடைவான். சம்சயமில்லை. மனுஷ்யர்களுக்குள் அவனைக்காட்டிலும் எனக்குப்பிரியமான காரியம்செய்பவன் வேறு எவனும் இல்லை. புவியில் அவனைக்காட்டிலும் எனக்குப் பிரியதரமானவன் இருக்கமாட்டான். நம்மிருவருக்கும் நடந்த இந்தத் தர்ம்ய (தர்மத்தை விளக்குவதான) ஸம்வாதத்தை (சம்பாஷணையை) எவன் அத்யயனம் செய்கிறானோ (படிக்கிறானோ) அவன் ஞான யஜ்ஞத்தால் எனக்கு இஷ்டனாகிறான். இது என்மதி (அபிப்ராயம்). ச்ரத்தையுடனும் அசூயை இன்றியும் இதைக் கேட்கும் நரன் தன் பாவங்களினின்று விடுபட்டு புண்ய கர்மர்களுக்குரிய சுபலோகங்களை யடைவான். பார்த்தா, இது உன்னால் ஏகாக்ர சித்தத்தோடு (ஒற்றைமனதோடு) கேட்கப்பட்டதா? தனஞ்ஜயா, உன் அஞ்ஞான சம்மோகம் அழிந்ததா?

அர்ஜுனன்: — மோகம் போய்விட்டது. உன் ப்ரசாதத்தால் நான் ஞானம் அடைந்தேன். சந்தேகம் நீங்கிவிட்டது. ஸ்திர புத்தியுள்ளவனாய் இருக்கிறேன். உன் வசனத்தைச் செய்கிறேன்.

சஞ்ஜயன்:— இவ்விதம் வாசுதேவருக்கும் மகாத்மாவான பார்த்தனுக்கும் நடந்த, அற்புதமும் மயிர் சிலிர்க்கச் செய்வதுமான ஸம்வாதத்தை நான்கேட்டேன். வியாசருடைய ப்ரசாதத்தால் இந்த குஹ்யதமமான பரம யோகத்தை யோகேச்வரரான சாக்ஷாத் ஸ்ரீ கிருஷ்ணனே சொல்ல நான் கேட்டேன். ராஜனே, கிருஷ்ணார்ஜுனர்களின் அற்புதமான இந்

தப் புண்ய ஸம்வாதத்தை ஸ்மரித்து ஸ்மரித்து (நினைத்து, நினைத்து) நான் திரும்பத் திரும்ப மகிழ்கிறேன். ராஜனே, ஹரியின் அந்த அதி அற்புத ரூபத்தை ஸ்மரித்து ஸ்மரித்து என் ஆச்சர்யம் மகத்தாயிருக்கிறது. திரும்பத் திரும்ப நான் மகிழ்கிறேன். எங்கே யோகேச்வரரான கிருஷ்ணனும், எங்கே வில் தரித்தவனான பார்த்தனும் இருக்கிறார்களோ அங்கே ஸ்ரீ (லக்ஷ்மி)யும் ஜயமும் அபிவிருத்தியும் ஸ்திரமான நீதியும் இருக்கும் என்பது என் மதம்.

ஸ்ரீ பகவத்கீதை முற்றிற்று.



அமெரிக்கன் ஆற்காட் மிஷன் பிரஸ், ஆரணி.

# முடிவுரை



ப்ரேமையோடு கூடிய இவ்வரிய உபதேசத்தால், அர்ஜுனன் தானே கர்த்தா என்கிற மோகம் நீங்கி, பகவானது கருவியாக, தன் ஸ்வபாவத்துக்கேற்ற கர்மத்தில் முனைகிறான். பதினெட்டு நாட்கள் நடந்த கடும்போரில் பீஷ்மர், த்ரோணர் முதலான கௌரவ ஸேனைத்தலைவர்களும், இதரர்களும் வதமுறப் பஞ்சபாண்டவர் வெற்றிபெற்றனர். அவர்களுள் மூத்தவரான தர்மபுத்திரர் ராஜ்யபட்டாபிஷேகம் செய்விக்கப்பெற்றார்.



# விஷய சூசிகை—Index

# அரும் பத வகராதி—Glossary



அக்னி-நெருப்பு
அகங்காரம்-அகந்தை
அகர்மம்-கர்மமின்மை
அகார்யம்-கார்யமின்மை
அச்யுதன்-விஷ்ணுவின் பெயர்
அச்வத்தமரம்-அரசமரம்
அசரம்-அசையாதது
அசலன்-சலனமற்றவன்
அசித்தி-நிறைவேறாமை, failure
அசிரத்தை-சிரத்தையின்மை
அசுர-ராக்ஷஸ
அசூயை-அருவருப்பு
அசேதனர்-சித்தத்தையிழந்தவர்
அஞ்ஜலி-கைகூப்பி வணங்குதல்
அணு-வெகுசிறியபாகம், atom, micros
அத்யாத்மம்-ஆத்மாவைப்பற்றி
அதம்செய்-வதை, கொல் [யது
அதம-ஈன
அதமர்-கேடர்
அதிக்ரமி-மீறு
அதிகதரம்-மிகஅதிகம் (comparative degree)
அதீதன்-கடந்தவன்
அந்தம்-முடிவு
அந்தர்யாமி, அந்தராத்மா } உள்ளிருப்பவன்
அநந்தம்-முடிவற்றது
அநாசன்-நாசமற்றவன்
அநார்யர்-அதமர், uncivilized people
அநித்யம்-நிலையற்றது
அநுசரி-பின்தொடர், வழிபடு
அநுக்ரஹி-ஆசீர்வாதம் செய்
அநுபந்தம்-பின் விளைவு consequence
அநுவர்த்தி-அநுசரி
அநுஷ்டி-வாழ்க்கையில் உபயோகி, practise
அப்பு-ஜலம்
அப்யாசம்-பழக்கம்
அபக்குவ-பக்குவமில்லாத, immature
அபயம்-எதற்கும் பயப்படாத நிலை
அபாத்ரன்-ஏற்கத்தகாதவன்
அமிர்தம்-சாவின்மை, இனியது, Immortality
அமித விக்ரம-மிதமிஞ்ன பராக்ரமசாலியே
அமூடர்-விவேகிகள்
அயுக்தன்-லோகவிருத்தன்
அர்கன்-தகுந்தவன்
அர்ப்பி-அர்ப்பணம் செய்
அர்த்தம்-பொருள், பணம்
அரிஸூதனா-சத்ருக்களைக் கொல்பவனே
அவ்யக்தம்-ஒடுங்கி இருப்பது, unmanifest
அவ்யக்தன்-மறைந்திருப்பவன்
அவ்யயம்-அழிவற்றது, குறைவற்றது
அவிபக்தன்-பிரிவு படாதவன்

அனகங்காரம்-அகங்காரமின்மை
அனாத்மன்-ஆத்மவிசாரமில்லாத
அனாதி-ஆதியில்லாதது [வன்
அனன்ய-அன்னிய மில்லாத
அஸங்கம்-உறவு கொண்டாடா
மை
அஜன்-பிறக்காதவன்
அஹிதம்-கேடு
ஆகாசம்-வெளி
ஆகுதி-ஹோமம் செய்யப்படும்
வஸ்து
ஆச்ரயம்-அடையுமிடம்
ஆச்ரயி-பின்பற்று
ஆசரி-பின்பற்றி நட
ஆசனம்-உட்காருமிடம்
ஆசார்யோபாசனம்-ஆசார்யனை
உபாசித்தல்
ஆணி வேர்-மூல வேர்
ஆதிபத்யம்-அதிபதியாயிருத்தல்
ஆநந்தபரம்-ஆநந்தத்தைப்
பரமாக உடையது
ஆர்ஜவம்-த்ரிகரணசுத்தி (அ-து
மனம் வாக்கு உடல் இவற்றின்
செய்கை ஒன்றுபட்டிருத்தல்,
Rectitude
ஆராதனை-பூஜை
ஆராதி-பூஜி
ஆரோக்யம்-சௌக்யம்
ஆஸக்த-பற்றுள்ள
ஆலஸ்யம்-தாமதம் செய்தல்
ஆஸ்திக்யம்-தைவ நம்பிக்கையும்
பக்தியும் faith and devotion to the Diety
இகம்-இவ்வுலக வாழ்க்கை
இதம்-நன்மை
இந்திரியங்கள்-ஐம்புலன்களும்.
மனமும்

இம்சாத்மா-பிறரை துன்புறுத்து
கிறவன், oppressor, tyrant
இறுமாப்பு-கர்வம்
ஈச்வரத்வம்-ப்ரபுத்வம், suzerainty
உக்ர-பயங்கரமான
உத்தமம்-மேலானது
உத்தேசித்து-கருதி
உத்பவி-பிற
உதாஸீனன்-சம்பந்தமில்லாத
வன்
உபய-இரு
உபாசி-தொழு
ஊகம்-inference
ஏகம்-ஒன்று
ஏகாக்ரம்-single-pointed,
ஒரு முனையதாய்
ஏகாக்ஷரம்-'ஓம்'
ஏது-காரணம், motive
ஓஜஸ்-சக்தி
க்ரோதம்-கோபம்
க்ருதக்ருத்யன்-செய்யவேண்டிய
தைச் செய்தவன்
க்ருபணர்-லோபிகள், misers
க்ருஷி-பயிர்செய்தல்
கந்தம்-வாசனை
கர்த்தா-கர்மம் செய்பவன்
கர்மபலம்-கர்மத்தின் பலன்
கர்மம்-காரியம்
கர்மேந்திரியங்கள்-வாய், கை,
கால், பாயு, உபஸ்தம்
கரணங்கள்-மனம், புத்தி, சித்தம்,
அகங்காரம்
கல்பக்ஷயம்-பிரம்மாவின்
பகலின் முடிவு
கல்மஷம்-மாசு
காமம்-அவா, சிற்றின்பம்

காம்ய-அவாவுள்ள
காயம்-உடல்
காரியம்-செயல், action
காலஹரணம் செய்பவன்-தாமதிக்கிறவன், man of delays
கிரகி-பற்று
கிரியை-காரியம்
குணாதீதன்-த்ரி குணங்களைக் கடந்தவன்
குரு நந்தனா-குருவம்சப் பிள்ளையே
குரு ப்ரவீர-குருவம்ச ப்ரசித்த வீரனே
குரு ஸத்தமா-குருவம்ச உத்தமனே
குல க்ஷயம்-குலநாசம்
குஹ்யம்-ரகசியம்
குஹ்ய தரம்-மிக ரகசியம்
குஹ்ய தமம்-பரம ரகசியம்
கூடஸ்தன்-மூல புருஷன்
கேசி நிஷூதனா-கேசியைக் கொன்றவனே
கோ ரக்ஷணம்-பசுக்களைக் காப்பாற்றல்
கௌந்தேயன்-குந்தி மகன்
கௌமாரம்-குமார பருவம்- 16 [வயசு வரை
ச்ரேயஸ்-புகழ்
ச்ரேஷ்டம்-மேலானது
சச்ரேஷ்டன்-உத்தமன்
சங்கல்பம்-கோரிக்கை
சங்க்யை-எண்ணிக்கை
சததம்-இடைவிடாது
சந்தஸ்-பாவகை,poetic meter
சந்துஷ்டி-நிறைவான சுகம்
சநாதனம்-என்றுமுள்ளது
சநாதனன்-என்றுமிருப்பவன்
சப்த ப்ரம்மம்-வேதம்
சபலமின்மை-விஷயப் பின் போக்கில்லாமை
சம்சயம்-சந்தேகம்
சம்சாரம்-உலகியல்பாம் சுக துக்கம் worldliness
சம் சித்தி-பூர்த்தியடைதல், attainment of perfection
சம்பத்து-செல்வம்
சம்பவம்-உண்டாதல்
சம்பவிக்கிறேன்-பிறக்கிறேன்
சம் மோகம்-மோகம்
சம் யோகம்-சேர்தல்
சம தரிசி-எல்லாவற்றையும் சமமாய்ப் பார்ப்பவன்
சமம்-மனதை அடக்குதல், control of the emotions, உள்இந்த்ரிய நிக்ரகம்
சராசரம்-அசைவனவும், அசையாதனவும் (பிரபஞ்சம்)
சரீர ப்ரயாசை-தேக சிரமம்
சரீரி-சரீரத்திலிருப்பவன், ஆத்மா
சலனம்-அசைவு
சலி-பிறழ்
சன்யசிக்கப்பட்ட-துறக்கப்பட்ட
சஸ்திரப்ரயோகி-மந்திரத்தோடு கூடிய ஆயுதங்களை உபயோகிப்பவன்
சாகரம்-சமுத்திரம்
சாச்வதம்-எப்பொழுதுமிருப்பது
சாக்ஷாத்-தானே, நேர்
சித்தப் பிராந்தி-மன மயக்கம்
சித்தி-ஸ்வரூப பூர்த்தி, நிறைவேற்றம், perfection of character accomplishment, Liberation
சிரத்தை-ஆர்வம், interest
சின்னம் செய்-வெட்டு

சுரர்-தேவர்; சூக்ஷமம்-நுட்பம்
(ச்)சேதி-பிள
சேஷம்-மிச்சம்
சோகம்-துக்கம்
சோர்வு-தளர்ச்சி
சௌசம்-சுசித்வம்
சௌர்யம்-வீரம்
ஞானம்-தத்வ அறிவு, wisdom
ஞானேந்திரியங்கள்-மெய், வாய், கண், மூக்கு, காது
ஞேயம்-ஞானத்துக்கு லக்ஷ்யமான பொருள்
த்யஜி-விடு
த்யாஜ்யம்-விடத்தக்கது
தியாகம்-துறத்தல்
தியாகி-சன்னியாசி
திரிலோகம்-தேவலோகம், பூலோகம், பாதாளலோகம்
த்ருடம்-உறுதி
த்வந்த்வங்கள்-சூடு குளிர்ச்சி, சுகம் துக்கம், மானம் அவமானம் முதலிய இரட்டைகள்
த்விஜோத்தமா-உடல் பிறப்பு, ஆன்ம பிறப்பு என இருபிறப்பினரில் உத்தமனே
த்வேஷம்-பகை
த்வேஷி-பகைவன்
தத்வ தரிசி-தத்வத்தை காண்பவன், ஞானி
தத்வம்-உண்மை
தபி-வருந்து, வாட்டு
தமம் வெளி இந்திரியங்களை அடக்குதல், control of the senses.
தர்மம் ஒருவரின் அல்லது ஒன்றின் இயற்கையான உண்மை, the innermost truth of one's being, அறம்

தர்மக்ஷேத்ரம்-தர்மத்துக்கு இருப்பிடம்
தரிக்கிறான்-தாங்குகிறான்
தவிர்-விலக்கு
தனஞ்ஜயன்-அர்ஜுனன்
தனுசு-வில்
தானவர்-ஒரு வகை அசுரர்
தீரன்-தைரியசாலி
துக்காலயம்-துக்கம் குடிகொண்டிருக்கும் கோயில்
துர்ப்பலம்-பலஹீனம்
துராக்ரகம்-பிடிவாதம்
துற-விடு
துஷ்க்ருதம் } -கெட்டகாரியம்
துஷ்கார்யம் }
தேகி-தேகத்தைத் தரிப்பவன், ஆத்மா
தேயு-தேஜஸ், நெருப்பு
தேவ வர-தேவர்களில் உத்தமனே
தேஜஸ்-ஒளி, அழகு
தேஜஸ்வி-ஒளி பொருந்தியவ
தைன்யம்-எளிமை
நரர்-மனிதர்
நாமயஞ்ஞம்-பேருக்கு மாத்திரம் செய்யப்படும் யஞ்ஞம்
நிக்ரகம்-அடக்கல்
நிகர்-ஒப்பு
நித்திரை-தூக்கம்
நித்யன்-நித்யமிருப்பவன்
நிபுணன்-வெகு தேர்ந்தவன்
நியமம்-ஏற்பாடு, regulation
நியமித-ஸ்வபாவத்தால் நியமிக்கப்பட்ட
நிர்குணன்-முக்குணங்களைக் கடந்தவன்
நிர்வாணம்-ஆநந்த நிலை
நிராசி-ஆசைகளை வென்றவன்

நிவிருத்தி-விலக்கு
நிஷ்டை-த்யான நிலை
நீச-இழிவான
நைஷ்கர்ம்ய-கர்மபந்தம் நீங்கின
ப்ரக்ருதி-இயற்கை
ப்ரசரி-வெளிப்படு, manifest
ப்ரசன்னமய-உகந்த, முக மலர்ந்த
ப்ரசஸ்தமான-சுப, auspicious
ப்ரசாதம்-அநுக்ரகம்
ப்ரசாந்தன்-சாந்த மனமுடைய வன்
ப்ரணவம்-'ஓம்' என்னும் எழுத்து
ப்ரதாபவான்-பராக்ரமசாலி
ப்ராண அபானகதிகள்-உள்ளிழுப்பதும் வெளிவிடுவதுமான [மூச்சு
ப்ருதிவி-பூமி
ப்ரதிஷ்டம்-நிலைக்கப்பெற்றது
ப்ரபஞ்சம்-சிருஷ்டி உலகம்
ப்ரம்ம பூதன்-ஞானி
ப்ரம்ம ஸூத்ரம்-ப்ரம்மத்தைப் பற்றின குறள்
ப்ரயோகி-உபயோகி
ப்ரவிருத்தி-ஆரம்பி
ப்ரளயம்-ஒடுக்கம், Deluge
ப்ரஞ்ஞை-அறிவு
ப்ரஜாபதி-ப்ரஜைகளை சிருஷ்டிப்பவன், பிரம்மா
ப்ரஜைகள்-ஜனங்கள்
ப்ராப்தியாய்-அடைந்து
பஞ்சமகா பூதங்கள்-மண், ஜலம், நெருப்பு, காற்று, ஆகாயம்
பந்தம்-கட்டு [மம்
பர தர்மம்-அன்னியனுடைய தர்
பரத ஸத்தமா-பரத குலத்தில் உத்தமனே

பரந்தபா-பகைவரை வாட்டுபவ [னே
பரந்தாமம்-பரமபதம்
பரந்தாமா-அனைத்துக்கும் அடைக்கலமே, Supreme Abode
பரம்-அனைத்துக்கும் மேலான, பரலோகம்
பரமன்-எல்லாவற்றிற்கும் மேலானவன்
பரம வில்லாளி-வில்லாளிகளுக்குள் முதன்மையானவன்
பரமேச்வரன்-இறைவன், கடவுள்
பரஸ்பரம்-ஒருவருக்கொருவர், ஒன்றுக்கொன்று
பரிசர்யம்-தொண்டு [purity
பவித்ரம்-பாவனம், சுத்தம்
பரிக்ரகித்தல்-பற்றிக்கொள்ளுதல், grasping
பரிணமம்-மாறுதல்
பரிமாணம்-அளவு, proportion
பலஇச்சை-பலத்தில் இச்சை
பலம்-பலன், பயன்
பஜி-தொழு, வணங்கு
பாத்திரம்-ஏற்கிறவன், ஏற்கிறது
பாப கிருத்தமன்-மகா பாபி
பார்த்தா-அர்ஜுனா
பாரதா-பரத வம்சத்தோனே
பாவங்கள்-நினைவுகள், aspects
பாவம்-நினைவு, feelings
பித்ரு-பித்ரு தேவதைகள்
பிரம்மசரியம்-பிரம்மத்தை நாடுகிறவனின் பரிசுத்த வாழ்க்கை
பிரம்மவாதி-வேதத்தை வழிபடுபவர்
பிரமாணம்-விதி, authority
பீதி-பயம்
புத்தி-மதி, understanding

புராதன-பழைய
புருஷோத்தமன்-புருஷர்களில்
புவி-உலகு [உத்தமன்
புனர் ஜன்மம்-மறு பிறப்பு
புஜம்-தோள்
பூதங்கள்-ஜீவர்கள்
பூதவிசேஷங்கள்-பலதரப்பட்ட
படைப்பு
போக்தா-அனுபவிக்கிறவன்
பௌருஷம்-புருஷத்தன்மை,
சக்தி, manhood, capacity
மகாபாஹோ-பெருந்தோளாய்
மகானுபாவர்-பெருந்தகையர்
மதம்-அபிப்ராயம், கொழுப்பு
மதுஸூதனு-மது என்ற அசு
ரனைக் கொன்றவனே
மமகாரம் } என்னுடையது எனும்
மமதை } விருத்தி, எண்ணம்
மனோரதம்-இஷ்டம்
மனோஹரம்-அழகான
மாச்சர்யம்-பொறாமை
மாதவன்-விஷ்ணு
மித்ரத்ரோகம்-சிநேகிதர்களுக்கு
மிருத்யு-சாவு, யமன் [வஞ்சனை
முக்தன்-விடுபட்ட மனமுடைய
வன், a man of freed
mind and heart
முமுக்ஷு-விடுதலையில் ஆசை
யுடையவன்
மூல ப்ரக்ருதி-ப்ரபஞ்ச காரண
மான மாயை
மேதாவி-அதிபுத்திசாலி genius
மோக்ஷம்-விடுதலை, வீடு, free-
dom, Liberation
மௌனம்-பேசாதிருத்தல்.
யதி-வீடுபெற யத்தனிப்பவன்
யஜ்ஞம்-வேள்வி, sacrifice

யுக்ததமன் }
யுக்தம் } 29—ம் பக்கம்
யுக்தன் } பார்க்க
யுத்த விசாரதர்-யுத்தப் பயிற்சி
யில் தேர்ந்தவர்
யுத்த ஸன்னத்தர்-யுத்தத்துக்கு
தயாராயிருப்பவர்
யோக யுக்த முனி-ஸமாதி லக்ஷ
ணம் பொருந்தியவன்
யோக க்ஷேமம்-சம்பாதித்தலும்,
சம்பாதித்ததைக் காப்பாற்றுத
யோனி-கருப்பை [லும்
ரணம்-போர்
ரதி-ஆநந்தி
ரஸாத்மகம்-ஸாரமாயுள்ளது,
ராகம்-பற்று [livesap
ரிஷீகேசா-இந்திரிய பதியே,
விஷ்ணுவே
லபி-கிட்டு, அடை
லக்ஷணம்-குறி, characteris-
tic
லோக ஸங்கிரகார்த்தம்-உலகம்
நடக்கவேண்டியதை முன்
னிட்டு, as an example
to the world
லோபம்-தானும் பிறரும் பயனை
அனுபவியா குணம், miser-
liness
வ்யக்தம்-வெளிப்படையானது,
manifest
வ்யபசரியாத-சன்மார்க்கத்தை
விட்டு நழுவாத
வ்ருத்தி-எண்ணம், தொழில்
வர்த்தி-இரு
வசனம்-சொல்
வாணிஜ்யம்-வர்த்தகம்
வாயு-காற்று

ஸ்மரி-நினை
விகர்மம்-செய்யத்தகாத காரியம்
விகாரங்கள்-மாறுபாடுகள்
விகாரம்-கலக்கம்
விஞ்ஞானம்-ஸ்வானுபவம், Realisation
விபரீதம்-பிசகு
விபாகம்-பிரிவு, பாகுபாடு
விமோக்ஷணம்-விடுதலை
வியாபி-பரவு
விருத்தர்-வயது சென்றவர்
விருக்ஷம்-மரம்
விஸ்தரிப்பு-(சிருஷ்டியால்) விரிதல்-Evolution
விஸர்க்கம்-வேள்வி, offering
வேதவித்-வேதார்த்தங்களை அறிந்தவன்
வேதாத்யயனம்-வேதம் ஓதுதல்
வைரம்-பகை
வைராக்யம்-நிராசை, Detachment
வைரி-சத்ரு
ஜகந்நிவாஸன்-ஜகத்துக்கு இருப்பிடம்
ஜகம்-உலகம்
ஜங்கமம்-அசையும்பொருள்
ஜரை-கிழத்தனம்
ஜனார்த்தனு-விஷ்ணுவே
ஜன்மபந்த முக்தர்-பிறப்புக் கட்டவிழ்பட்டவர்
ஜனித்தவன்-பிறந்தவன்
ஜிதேந்திரியன்-இந்திரியங்களை ஜயித்தவன்
ஜீவ பூதன்-ஜீவன்
ஸ்தாவரம்-அசையாப்பொருள்
ஸ்திதப்ரஞ்ஞன்-ஸமாதியில் நிலைத்த அறிவோடிருப்பவன் (11, 12-ம் பக்கம் பார்க்க)
ஸ்திரமதி-பிறழாத புத்தியுடையவன் (59-ம் பக்கம்)
ஸ்வகர்மம்-ஒருவன் இயற்கைக்குச் சொந்தமான கர்மம், natural work
ஸ்வதர்மம்-ஸஹஜ தர்மம்
ஸ்வபாவம்-இயற்கையான தன்மை
ஸ்வயமாக-தானாக
ஸ்வல்பம்-சிறிது
ஸ்வஜனங்கள்-பந்துக்கள்
ஸங்கம்-உறவு, சேர்க்கை
ஸத்-உள்ளது
ஸததம்-இடைவிடாமல்
ஸத்வஸந்துஷ்டி-தன்னியல் சார்தலால் உண்டாகும் திருப்தி
ஸநாதனம்-என்றுமிருப்பது
ஸநாதனன்-என்றுமிருப்பவன்
ஸம்பத்து-செல்வம்
ஸம்யோகம்-சேர்க்கை
ஸம்வாதம்-சம்பாஷணை
ஸமாஸம்-இலக்கணசந்தி, தொகை
ஸாகரம்-ஸமுத்திரம்
ஸுக்ருதம்-நல்ல காரியம்
ஸௌம்யம்-பார்க்கப் பிரியமான
ஹ்ருதய துர்ப்பலம்-மனோபலமின்மை faint-heartedness
க்ஷமி-பொறுத்துக்கொள்
க்ஷயம்-அழிவு, முடிவு
க்ஷரம்-ப்ரக்ருதி விகாரங்களுக்கு உட்பட்டது (71-ம் பக்கம்)
க்ஷாந்தி-பொறுமை forbearance
க்ஷீணித்தல்-குறைதல்.
க்ஷீரம்-பால்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 7 | சாஸ்வதமான | சாச்வதமான |
| 16 | 30 | தாந்தான் | தான் தான் |
| 19 | 15 | ஈஸ்வர | ஈச்வர |
| ,, | 2324 | அடைகிறுன் | அடைகிறுன் |
| 21 | 19 | கேட்டல் | செவி |
| 28 | 10 | அருடன் | ஆரூடன் |
| 30 | 7 | சம்மந்த | சம்பந்த |
| 30 | 29 | பூதங்களும் | பூதங்களிலும் |
| 34 | 3 | பௌர்ஷம் | பௌருஷம் |
| 39 | 18 | சொல்லாத | செல்லாத |
| ,, | 22 | திரும்பாரர்களோ | திரும்பார்களோ |
| 40 | 2 | ஜன்மத்துக்குக் | ஜன்மத்துக்குத் |
| 42 | 1 | கட்டுபடுத்து | கட்டுப்படுத்து |
| 43 | 1 | நனே | நானே |
| 45 | 18 | அபகீர்த்தி, | அபகீர்த்தி. |
| 46 | 22 | ஐச்வர்யங்கள்களால் | ஐச்வர்யங்களால் |
| 47 | 6 | ஜீவன்களின் | ஜீவர்களின் |
| ,, | 13 | consciousness | consciousness |
| 50 | 6 | மகாத்மிய | மாகாத்மிய |
| 51 | 17 | creation | Creation |
| 55 | 21 | சகஜ | சகஜ |
| 58 | 4 | இல்லாத | அல்லாத |
| ,, | 23 | விடுப்பட்ட | விடுபட்ட |
| 59 | 5 | மௌனீ | மௌனி |
| 61 | 27 | ஸ்வரூயம் | ஸ்வரூபன் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 63 | 22 | இல்லே | அல்ல |
| 65 | 22 | விளைவிப்பதும் | விளைவிப்பது |
| 72 | 17 | அசுரம் | ஆசுரம் |
| 74 | 6 | வெகுமத்தித்து | வெகுமதித்து |
| 76 | 21 | ஆகிரமும் | ஆகாரமும் |
| 77 | 12 | அமேத்யம் | அமேத்யமு |
| ,, | 13 | உபயோகிக்கபெடாதது | உபயோகிக்கப்படாதது |
| 80 | 3 | உன்மையை | உண்மையை |
| ,, | 13 | தியாஜ்யமில்லே | தியாஜ்யமல்ல |
| ,, | 17 | இச்சையும் | இச்சையையும் |
| 87 | 23 | மாசுச | மாசுச : |